KALKI 29.9.96 ரூ. 3.00

# கல்கி

- ஐயோ பாவம், ஆதிபுரீஸ்வரர்! திருவொற்றியூர் கோவிலுக்கு ஒரு திடீர் விசிட்!

- சந்திரலேகாவின் அம்மாவுடன் ஒரு ஸ்பெஷல் பேட்டி!

## அலுவல் நேரம்; வழிசல் வேணாம்!

# "நல்ல கவிஞர்களுக்குச் சினிமாவில் இடமில்லாமல் போய்விட்டதே!"

## மனசுல இருந்தது; கொட்டிட்டேன் :

### கவிஞர் நா. காமராசன்

**1967**ம் ஆண்டு என்று நினைக்கிறேன். திரைக்கதை-வசனம்-பாடல்கள்- டைரக்ஷன் ஆகிய பொறுப்புகளை என்னிடம் கொடுத்து 'பூஜிக்கும் கரங்கள்' என்ற படத்தைத் தயாரிக்கத் திட்டமிட்டார் என் நண்பர் விஜயகணேஷ். இந்தச் செய்தியைப் பத்திரிகைகள் மூலம் அறிந்த எம்.ஜி.ஆர்., என்னை ஒருநாள் தோட்டத்திற்கு வரச் சொன்னார். நான் ஏற்கெனவே எனது 'கறுப்பு மலர்கள்' என்னும் கவிதைத் தொகுப்பை அவருக்குக் கொடுத்திருந்தேன். 'என் படத்திற்கு நீங்கள் பாடல்கள் எழுத வேண்டும்' என்றார்.

ஆனால், இலக்கியத்தைப் புனிதமானது என்ற ரீதியில் அணுகுகிற எனக்கு, திரைப்படத்திற்குப் பாடல் எழுதுவது என்பது உடன்பாடான ஒன்றாகத் தெரியவில்லை. இருந்தாலும் எம்.ஜி.ஆர். அவர்கள் கொடுத்த சுதந்தரம் காரணமாக, முதன்முறையாக அவரது படமான 'நீதிக்குத் தலை வணங்கு' படத்தில், 'கனவுகளே' என்று தொடங்கும் பாட்டை எழுதினேன். "பரவாயில்லையே நன்றாகவே எழுதுகிறீர்கள். கண்ணதாசனுக்கு அடுத்தபடியாக நீங்கள் வருவீர்கள்" என்று ஊக்கு வித்தார் எம்.ஜி.ஆர்.

பின்னர் எம்.ஜி.ஆர். தீவிர அரசியலுக்குச்



செல்லும் வரை நடித்த படங்களில் பாடல்கள் எழுத வாய்ப்புக் கிடைத்தது.

அதன்பின் கொஞ்சம் இடைவெளி. அப்புறம் சிலர் கூப்பிட்டார்கள். சரி; வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்றால், மனதைக் காயப்படுத்தும் அளவுக்கு நடந்து கொண்டார்கள். திரை உலகத்தைப் பொறுத்தவரை யாருமே ஆழமாகச் சிந்திப்பது கிடையாது. பேசுவது கிடையாது. காட்சியைச் சொல்லி இந்தக் காட்சிக்குத் தக்க பாட்டு வேண்டும் என்று சொன்னால் கூடப் பரவாயில்லை. 'இந்த வார்த்தைகளைப் போட்டு எழுதுங்க' என்றெல்லாம் வற்புறுத்தல். நன்கு படித்த தன்மானக் கவிஞன் தாக்குப் பிடிக்க முடியாத நிலை!

என்னை நன்றாக அறிந்த, தெரிந்த ஜேப்பியார் எடுத்த படத்தில் எனக்கு வாய்ப்புகள் கொடுக்கப்பட்ட போதும், அதே நிலைதான். பணத்துக்காகவும், புகழுக்காகவும் சமாதானமாக, எல்லாவற்றையும் அனுசரித்துப் போக என்னால் முடியவில்லை. இதனால்தான் சினிமா உலகில் என்னால் நீடித்து நிலைத்து நிற்க முடியவில்லை. ஆனால் எம்.ஜி.ஆர். படங்களில் பாட்டு எழுதும் போது நான் விருப்பப்பட்டதை எழுதும் சுதந்தரம் இருந்தது!

திரைப்படத்துறையைப் பொறுத்த மட்டில் கண்ணதாசன் ஒரு விதிவிலக்கு. ஆனால் அவர் கூட, திரைப்பாடல் மற்றும் உரைநடையில் தான் சிறந்து விளங்கினாரே தவிர, ஒரு சிறந்த கவிஞராக விளங்கவில்லை என்பது என் கருத்து. நல்ல இலக்கியவாதிக்கு திரை உலகம் ஏற்புடையதாக இல்லை. ஏனென்றால் அங்கே எல்லாம் வியாபார ரீதியில் தான் அணுகப்படுகிறது.

இதுதான் எனது நீண்டகால ஆதங்கம். திரைப்படத்துறையில் நான் பிரகாசிக்க முடியவில்லை என்கிற தனிப்பட்ட ஆதங்கம் அல்ல இது. இத்தனை பெரிய ஒரு மீடியாவில் நல்ல கவிஞர்களுக்கும் இலக்கியத்துக்கும் இடமில்லாமல் போகிறதே என்கிற பொதுவான ஆதங்கம் இது!

சந்திப்பு : **ப்ரியன்**
படம் : **பேஜர் கே. மூர்த்தி**

# சந்திரலேகாவின் அம்மாவுடன் ஒரு பேட்டி!

தமிழக ஜனதா கட்சியின் தலைவர் சந்திரலேகாவை அனைவருக்கும் தெரியும். அவரது தாயாரை? அவர்தாம் திருமதி சாரதாவிஸ்வநாதன். சுமார் 350 சிறுகதைகள், 20 நாவல்கள் எழுதி வாசகர்கள் மத்தியில் நன்கு அறிமுகமானவர். அவரைச் சந்தித்த போது...

"ஆண்ட்டி, நீங்க உங்க பொண்ணை ஐ.ஏ.எஸ். படிக்க வைச்சுட்டீங்க... எங்கம்மா பாருங்க... என்னை நடிகையாக உருவாக்கிட்டாங்க.' என்று ஜெயலலிதா என்னிடம் சொன்னதுண்டு. ராஜாஜி போன்று நல்ல நேர்மையான, ஆட்சியைக் கொடுப்பார் என்று நம்பிக் கொண்டிருந்தோம். பல காரணங்கள் இருந்தாலும் ஜெயலலிதாவின் வீழ்ச்சிக்கு சசிகலா குடும்பத்தின் நெருக்கமும் ஒரு காரணம். சசிகலா இப்போது இருப்பதுதான் அவருக்குப் பொருத்தமான இடம். அந்தப் பெண்ணைப் பற்றி எனக்குத் தெரியும். சுர்லா வாக்குமூலத்தில் தெளிவாகவே 'ஆசிட் வீசச் சொன்னவர் ஜெயலலிதாதான்' என்று சொல்லியிருக்கிறான் என்று சொல்கிறார்கள். ஆனால் ஒரு ஐ.ஏ.எஸ். அதிகாரி ஆசிட் வீச்சால் பாதிக்கப்பட்டு ஆஸ்பத்திரியில் இருக்கும்போது, போய்ப் பார்க்க வேண்டும் என்ற அடிப்படைப் பண்பு கூட ஜெயலலிதாவுக்கு இல்லையே.

"அப்படிப்பட்ட ஜெயலலிதா இன்று தாமாகவே முன் வந்து சந்திரலேகாவை ஆதரிக்கிறார். யாரும் அவரை வெற்றிலைப் பாக்கு வைத்து அழைக்கவில்லை. வேண்டாதவர் ஒருவர் வீட்டு வாசலுக்கு வந்து விட்டால் அவரைத் துரத்திவிட முடியுமா? அது போன்ற நிலைதான்... மதுரையில் எம்.எல்.ஏ.வுக்குப் போட்டியிட்டபோது நான் மகளுக்காகப் பிரசாரம் செய்தேன். இப்போது, ஜெயலலிதாவின் இந்தப் போக்கு ரொம்பவும்



# “வேண்டாதவர் வந்து விட்டால் துரத்திவிட முடியுமா?”

தர்மசங்கடமாக இருக்கு. சந்திரலேகாவிடம் இது பற்றிக் கேட்டேன். ‘நாம என்ன செய்ய முடியும்? நாம யாரும் அவங்ககிட்ட பேசலை. இனி பேசப் போவதும் இல்லை. சேர்ந்து பிரசாரம் செய்யப் போவதும் இல்லை’ என்று சுருக்கமாகச் சொன்னாள். என்றாலும் பிரசாரத்திற்குச் செல்லும்போது நாலு பேர் நாலு கேள்வி கேட்கும்போது பதில் சொல்லவும் அவள் தயாராக இருக்க வேண்டும்!” என்றவர் தமது மகள் சந்திரலேகாவைப் பற்றியும் பேசினார்.

“என் மகன்களுக்கும், மகளுக்கும் அவர்கள் இஷ்டப்படி வாழ்க்கையை அமைத்துக் கொள்ள முழுச் சுதந்தரம் கொடுத்துள்ளேன். சந்திரலேகா எந்தவித கறுப்புப் புள்ளியும் இன்றி சுமார் இருபது வருடங்கள் ஐ.ஏ.எஸ். சர்வீஸில் இருந்திருக்கிறாள். ரொம்பவும் கடவுள் பக்தி அவளுக்கு. காலையில் எழுந்து பூஜை செய்யாமல் வெளியே கிளம்ப மாட்டாள். ஆசிட் தாக்குதல் அன்று கூட ராஜராஜேஸ்வரிக்கு பூஜை செய்யும் போதே ‘கண்ணை மூடிக்கோ’ என்று அசரீரி குரல் போலக் கேட்டதாம்.

“அதே போல் ஆஸிட் வீசும்போது அதே குரலின் ரீ-ப்ளே! ‘கண்ணை மூடியதால் கண் தப்பித்தது. அந்தச் சம்பவத்துக்குப் பிறகு சர்வீஸே வேண்டாம் என்று ராஜிநாமா செய்தாள். அப்போது நான் ஹாங்காங்கிலிருந்தேன். ‘ஒருதடவைக்கு ரெண்டு தடவை யோசிச்சு செய்யம்மா’ என்று கேட்டுக் கொண்டேன். ‘இப்போதிருக்கும் அமைப்பில் ஒரு நல்ல காரியம் கூடச் செய்ய முடியாதம்மா. இன்னும் நல்ல exposure தேவைன்னா வெளியே வந்தாத்தாம்மா முடியும்’ என்றாள்.”

சந்திப்பு: **தில்லப்பா**

**“ஜெயலலிதாவின் வீழ்ச்சிக்கு சசிகலா குடும்பத்தின் நெருக்கமும் ஒரு காரணம். சசிகலா இப்போது இருப்பதுதான் அவருக்குப் பொருத்தமான இடம். ”**



# அலுவல் நேரம், வழிசல் வேணாம்!

சில வருடங்களுக்கு முன், பம்பாயில் (சாரி, மும்பையில்) ஒரு நிறுவனத்தில் நடந்த நிகழ்ச்சி

துடிப்பும் துள்ளலுமாக லிஃப்டில் இருந்து வெளிப்பட்டு, மெலிதாகச் சீட்டியடித்துக் கொண்டே அலுவலகத்தில் நுழைகிறான் இளைஞன் விஜய். பிரதான ஹாலுக்குள் நுழைந்து, ஒரு பாலே நடனக் கலைஞரின் நெளிவோடு நடந்து வந்து, ரிஸப்ஷனிஸ்ட் ரம்யாவின் தலையிலிருந்து அழகாக ஊஞ்சலாடிய மல்லிகைச் சரத்தைப் படு ஸ்டைலாகத் தட்டுகிறான். ரம்யா திடுக்கிடலோடு திரும்ப, கையை உயர்த்தி 'ஹாய்' சொல்லும் விஜயின் கையோடு அந்த வெள்ளை மல்லிகைச் சரம் வெளிப்பட்டு, நழுவி பின்னால் இறங்குகிறது.

இறங்கிய மல்லிகைச்சரம், பின்னால் வந்து கொண்டிருந்த மானேஜிங் டைரக்டர் குப்தாவின் வலது தோள் பட்டையில் சர்ரென்று இறங்கி, இடமும் பிடித்துக் கொண்டு விடுகிறது!

பின்னால் திரும்பிப் பார்க்கிறான் விஜய்.

கோபத்தால் முகம் சிவக்க, பல்லைக் கடித்துக் கொண்டு நிற்கிறார் குப்தா. பயத்தில் உறைந்து போயிருக்கிறாள் ரம்யா.

பார்வையாளர்கள் நாற்காலிகளில் அமர்ந்திருக்கும் இரண்டு பேரும் சினிமா பார்க்கிற வேடிக்கையில் சுவாரசியமான அடுத்தக் காட்சியை எதிர்நோக்கிக் காத்திருக்கிறார்கள்.

இளைஞன் விஜய்க்கு என்ன நேர்ந்திருக்கும் என்று அதிகம் கற்பனை செய்ய வேண்டாம் :

சீட்டைக் கிழித்து, கணக்கைத் தீர்த்து, அன்றே, அப்போதே வாசலைக் காண்பித்தார் குப்தா.

ஆபீஸ் மொத்தமும் அதிர்ந்துபோய் விட்டது. இத்தனைக்கும் விஜய் வேலையில் கெட்டிக்காரன். ஆமதாபாத் மானேஜ்மெண்ட் இன்ஸ்டிட்யூட்டில் பட்டம் பெற்றவன். ஒரு பிரச்னையிருந்தால், நான்கு தீர்வுகளை மளமளவென்று சொல்லி, 'கூல் ஈஸி ஒன்!' என்று கவலையைத் தீர்த்து வைப்பவன்.

மானேஜிங் டைரக்டர் குப்தா இவை எதையும் கணக்கில் எடுத்துக் கொள்ளவில்லை.

'ஒரு பொது இடமான அலுவலகத்தில் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்று கூடத் தெரியாதவன், தன் ஆபீசில் இருக்கத் தேவை இல்லை' என்று தீர்மானித்து விட்டார். அவ்வளவுதான்.

தன் தங்கையின் திருமணம் நிச்சயமாகிவிட்ட இனிப்பான செய்தியோடு விடிந்த காலை வேளையில் பிறந்த விஜய்யின் உற்சாக ஊற்று, ஒரு டெர்மினேஷன் லெட்டர் வடிவில் அடங்கிப்போய் விட்டது.

விஜய் இவ்வளவு 'துணிவு'டன் நடந்து கொண்டதற்குக் காரணம் என்ன...?

அவனுடைய பதவி அளித்த முக்கியத்துவ உணர்வா?

ஆண்-பெண் சகஜமாகக் கலந்து பழகுவதில் தவறில்லை என்கிற மாறிவரும் மதிப்பீடா...?

ஒரு ஜூனியர் ஊழியை என்கிற முறையில் ரம்யா விஜய்யிடம் காட்டி வந்த சகிப்புத்தன்மை அவனுக்குக் கொடுத்த ஊக்கமா?...

அல்லது ஓர் இளம் பெண் என்கிற முறையில் ஓர் இளம் ஆடவனின் கவனத்தை ஈர்த்துவிட்ட கிளுகிளுப்பினால் ரம்யாவும் அவன் நடத்தையைத் தூண்டி வந்தாளா...?

**கவர் ஸ்டோரி : அலுவலக நாகரிகம்**



இவை அனைத்துமே காரணமாயிருந்திருக்கலாம்; அல்லது இவற்றுள் ஓரிரண்டு காரணங்கள் சம்பவத்தைத் தூண்டியிருக்கலாம்... எனினும், ரம்யாவின் அதிர்ஷ்டம், அவள் வேலை போகவில்லை!

கென்னடி ஜனாதிபதியாக இருந்த சமயம், 'எக்ஸிக்யூடிவ் எம்ப்ளாயி ஸ்டாண்டர்ட்' சட்டத்தை அறிமுகப்படுத்தியபோது, ஓர் அரசு ஊழியர் என்றில்லாமல், எந்த ஊழியருமே எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்று விளக்கினார். ஓர் ஊழியரின் அலுவலக நேர நடத்தை, தனிப்பட்ட அவரை மட்டும் அல்லாது, அவர் சார்ந்திருக்கும் நிறுவனத்தையும் பாதிக்கும் என்ற கருத்தை அப்போது வெளியிட்டார்.

அழகான செக்ரடரிகள் இருந்துவிட்டால் சில மானேஜர்களுக்கு 'மானர்ஸ்' மறந்து போய் விடுவதுண்டு.

தமது அறைக்குப் போன உடனேயே, 'சரளா, ப்ளீஸ் கம் இன் ஃபர் எ மினிட்' என்று இன்டர்காமில் அழைப்பு வரும்.

உள்ளே நுழைந்ததுமே, 'ஓ யு லுக் வெரி ஸ்மார்ட்!' என்று பாராட்டு உதிரும்.

'டேக் யுர் ஸீட்!' - அடுத்தது.

நாற்காலியில் செக்ரடரி அமர்ந்ததுமே மேசை மீது காலைத் தொங்கப் போட்டபடி ஸ்டைலாக - வெகு அருகே - அமர்ந்து கொண்டு, 'ஹேஹ, யு லுக் கார்ஜியஸ் இன் திஸ் டிரஸ்!' என்று பூமாரி பொழிவது.

செக்ரடரிக்குப் பாவம் தர்மசங்கடமாய் இருக்கும். மெல்லுவதா, விழுங்குவதா?

தோடு அசல் வைரமா, இல்லை வெறுமனே பளபளக்கும் கல்லா என்று ஆரம்பித்து, சுற்றி வளைத்து, அசடு வழிந்து கொண்டிருக்கும்போது -

டப்டப்பென்று தட்டிவிட்டுக் கதவைத் திறந்து கொண்டு சேல்ஸ் மானேஜர் உள்ளே நுழைகிற வேளை -

## ஆபீஸ் போவோருக்குச் சில டிப்ஸ்!

● ஆபீஸில் நுழையும்போதே அனைவருக்கும் பளிச்சென்ற புன்னகையுடன் 'குட் மார்னிங்' சொல்லுங்கள். இந்த மகிழ்ச்சி தொற்று வியாதியாய்ப் பரவும்.

● சக ஊழியர்களின் குறைகளை சுருக்கமாகவும் தெளிவாகவும் குறிப்பிடலாம் - ஆனாலும் அது மற்றவர்கள் எதிரில் அல்ல!

● தாங்கள் வேலை செய்யும் நிறுவனத்தைப் பற்றிய ஒரு 'கர்வத்தை' ஊழியர்களிடம் வளர்த்து விட்டால் போதும். 'சக ஊழியர்கள் எப்படி இருந்தால் எனக்கென்ன? என் நிறுவனத்துக்காக நான் முழு மூச்சுடன் உழைப்பேன்' என்னும் போக்கை அவர் வளர்த்துக் கொள்வார்.

● நீங்கள் எண்ணுவதை மற்றவர்கள் செய்ய வேண்டுமா? இதோ ஓர் எளிய வழி. அவர்களது நியாயமான எதிர்பார்ப்புகளை நீங்கள் முதலில் நிறைவேற்றுங்கள்.

● கீழ்மட்ட ஊழியர்களின் குறையைச் சுட்டிக்காட்ட வேண்டுமா? அவருடைய இரண்டு (நிஜமான) நிறைகளுக்கு நடுவே இந்தக் குறையைத் திணித்துச் சொல்லவும்.

● ஆபாச ஜோக்குகள், சக ஊழியர்கள் பற்றிய அலட்சிய கமெண்ட்டுகள் ஆபீஸில் வேண்டாம். அதுவும் உங்கள் மேலதிகாரிகளிடமோ, உங்களுக்குக் கீழ் பணிபுரிபவர்களிடமோ வேண்டவே வேண்டாம்.

● மேலதிகாரியிடம் நீங்கள் நினைப்பதை (அவர் கூறியதற்கு நேரெதிரான கருத்தைக் கூட) பளிச்சென்று சொல்வதில் தவறில்லை. ஆனால் அப்போது பேச்சிலோ, தொனியிலோ அகங்காரம் தென்படக் கூடாது.

● உங்கள் கீழ் பணியாற்றும் ஓர் ஊழியர் ஒரு பிரச்னையாக மாறிக் கொண்டிருக்கிறாரா? அவரைக் கூப்பிட்டு ஒரு கேள்வியை வீசுங்கள் — "நீங்கள் மகிழ்வோடு முழு வேகத்துடன் வேலை பார்க்க நான் என்ன செய்ய வேண்டுமென்று நினைக்கிறீர்கள்?" விளைவு? அவரிடம் முதலில் தடுமாற்றமும், பிறகு மாற்றமும் தெரியும்.

● அலுவலக ரகசியத்தை 'உன்னிடம் மட்டும் சொல்கிறேன்' என்று யாரிடமும் சொல்லித் தொலைக்க வேண்டாம். அது உங்களுக்கெதிராகத் திரும்பக்கூடும்.

● எந்த முக்கிய முடிவெடுப்பதற்கு முன்னும் சம்பந்தப்பட்ட அனைவரையும் ஆலோசனை கேளுங்கள். தானும் பங்குகொண்ட திட்டமென்பதால் அதை எல்லோரும் சிறக்க

செக்ரடரிக்கு விடுதலை கிடைக்கும்.

பெரும்பாலான சந்தர்ப்பங்களில், பெண்கள் பயம் காரணமாகவும் வேலையைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டுமே என்ற கட்டாயம் காரணமாகவும் ஆண்களின் வழிசல்களைச் சகித்துக் கொள்கிறார்கள்.

ஆனால், பல பெண்கள் இந்த வழிசல்களில் விரும்பிப் பங்கேற்று வினையைத் தேடிக் கொள்ளவும் செய்கிறார்கள்.

கட்டுப்பாடு இருந்த வீட்டுச் சூழலிலிருந்து கிடைத்த விடுதலை...

மிக இள வயதிலேயே கை நிறைய சம்பாதிக்க முடிகிற உணர்வு தரும் இரக்கம்...

அதன் பயனாக எழும் 'என்ன தப்பு' என்கிற வீம்புக் கேள்வி...

அந்தக் கேள்விக்கு சினிமா கற்பனைகள் ஏற்றும் உரம்....

இவையெல்லாம் சேர்ந்து ஆட்டுவிக்கின்றன.

அப்படியானால், அலுவலகத்தில் கலகலப்பாய்ப் பழகுவதோ அன்னியோன்யமாய்ப் பழகுவதோ குற்றமா...? என்ற கேள்வி எழுகிறது.

அலுவல் கடந்த விசாரிப்புகளும் பேச்சுகளும் அளவு கடந்து போகாமல் இருக்க வேண்டும். அவ்வாறு வைத்துக் கொள்ளத் தெரிந்தவர்கள் கலகலப்பாய்ப் பழகலாம். ஆனால் அந்த உறவைக் கட்டுக்குள் வைத்துக் கொள்ள இயலாதவர்கள் வெறும் அலுவலக உறவோடு நிறுத்திக் கொள்வதே மேலானது.

● உடையிலும் நடத்தையிலும் பெண்கள் ஆண்களைவிட எச்சரிக்கையுடன் இருக்க வேண்டியது இயற்கையின் அவசியம்.

● குலுங்கும் வளை, சிணுங்கும் கொலுசு, தொங்கும் பூ, ஊரே மணக்கச் செய்யும் பர்ஃப்யூம் - இவை அலுவலகச் சூழலுக்குப் பொருந்தாதவை. தவிர்க்கலாம்.

● ஆண்கள் - உயரதிகாரிகளானாலும் சரி - தனிப்பட்ட விஷயங்களைப் பேச ஆரம்பித்தால் தைரியமாகத் துண்டிக்கலாம். முளையிலேயே கிள்ளிவிட்டால் பிரச்னையில்லை. ஆனால் ஆரம்பத்தில் பயம் அல்லது பச்சாதாபத்தினால் அத்தகைய பேச்சுக்கு இடம் கொடுத்துவிட்டால் பிற்பாடு துண்டிப்பது கஷ்டமாகிவிடும்.

● 'என் மனைவி ரொம்ப மோசம்...' என்று ஆரம்பிக்கும் ஆண்களை அறவே தவிர்த்துவிடுங்கள்.

***ஆண்களுக்கும் சில எச்சரிக்கைகள் இருக்கின்றன:***

● ஜூனியரான பெண் ஊழியரானாலும் ஒருமையில் அழைக்காதீர்கள். 'ர்' விகுதி அலுவலக முத்திரையை வலுவாகப் பதிக்கும்!

● பெண்கள் ரம்மியமாகக் காட்சி அளித்தால் வேலைக்கு உற்சாகம் சேர்க்கும் டானிக்காக அதைப் பயன்படுத்தி முன்னேறுங்கள் - வேலையிலிருந்து கவனத்தைத் திசை திருப்ப அதைக் காரண

மாக்கிக் கொள்ளாதீர்கள்.

● ஜூனியர் ஊழியையைக் கண்டிக்கிற நேரத்தில் அவர் அழுது தொலைத்தால் பதறாதீர்கள். 'நீங்கள் அழவேண்டும் என்பதற்காக இதைச் சொல்லவில்லை. உங்கள் பணி முன்னேற வேண்டும் என் கிற நல்லெண்ணத்தில்தான் சொன்னேன். இப்போது போய்விட்டு - மனத்தைத் திடமாக்கிக் கொண்டு வாருங்கள், தொடர்ந்து பேச லாம்' என்று அறையை விட்டு வெளியே அனுப்பி விடுங்கள்.

● இதைப் போன்ற கண்டிக்க வேண்டிய சந்தர்ப்பங்களில் வேறொரு உயர் அதிகாரியையும் உடன் வைத்துக் கொள்ள முடியுமானால் ரொம்ப நல்லது. சம்பந்தப்பட்ட பெண் நிச்சயமாக அழ மாட்டார்!

ஜப்பானிய நிறுவனங்களில் கடைபிடிக்கப்படும் 'ஓர்க் எத்திக்ஸ்' எனப்படும் அலுவலக நன்னடத்தை, கிட்டத்தட்ட உலகம் முழுக்க சிலாகித்துப் பேசப்படுகிறது. அவர்களுடைய உற்பத்தித் திறனுக்கு அதுவே முக்கியக் காரணமாகக் குறிப்பிடப்படுகிறது.

சில அதிகாரிகள், தம்மைப் பார்க்க வருகிற விசிட்டர்களைக் காக்க வைப்பதில்லை என்று பிடிவாதமாக இருப்பார்கள். ஒரு புகழ்பெற்ற பன்னாட்டு நிறுவன உயர் அதிகாரி இந்த ரகம்தான். ஊழியர் விசிட்டிங் கார்டை உள்ளே அனுப்பிய உடனேயே, பார்வையாளரைக் கூப்பிட்டு விடுவார். அதே போல், பேச்சு முடிந்ததும், கச்சிதமாக வாழ்த்துச் சொல்லி, நாசூக்காக அனுப்பி வைத்து விடுவார். 'அவர் வேலையும் கெடாது; நம் வேலையும் கெடாது பாருங்கள்!' என்பார் புன்னகையோடு. வருகிற விசிட்டர்களும் இதே போன்ற அணுகுமுறையைக் கையாண்டால் எவ்வளவு நன்றாக இருக்கும்?

பார்க்க வரும் நண்பர்கள், அரட்டைக்கெனவே அழைக்கும் தொலைபேசி அழைப்புக்கள் விஷயத்தில் ஜாக்கிரதை அவசியம். அலுவல் நேரத்தில் சொந்த விஷயங்களுக்காக நாம் செலவு செய்யும் ஒவ்வொரு வினாடியும் அலுவலகத்தில் நம் இமேஜை அடிவாங்க வைக்கும்.

அலுவல் நேரம், அலுவல் பணி ஆகியவற்றின் முக்கியத்துவத்தை உயர் அதிகாரிகள் தங்கள் நடத்தை மூலமே தொடர்ந்து அறிவுறுத்திக் கொண்டிருந்தால் சுறுசுறுப்பான, சீரியஸான அலுவல் சூழல் உருவாகும். அத்தகைய சூழலில் வம்பு வளர்வதற்கும், வழிசல் நேர்வதற்கும் வாய்ப்புகளும் குறைந்து போகும்.

— சித்தார்த்

அட்டை வண்ணப்படம் : யோகா

நடிப்பு : வெங்கட்ராமணி, லக்ஷ்மி

வைக்க வாய்ப்பு அதிகம்.

**அலுவலகப் பெண்களுக்கு சில ஆலோசனைகள்:**

● உங்கள் இமேஜை உருவாக்குவதில் உடைக்கு முக்கியப் பங்குண்டு. கண்ணியமாக உடை அணியுங்கள்.

● இளம்பெண்கள் "இந்த சம்பளத்தை நம்பித்தான் என் குடும்பமே இருக்கு" என்று மேலதிகாரிகளிடம் கூற வேண்டாம். அதே போல் தங்கள் மனபாரத்தை மற்றவர்களிடம் – குறிப்பாக ஆண் அதிகாரிகளிடம் – இறக்கத் துடிக்க வேண்டாம். ஆறுதல் அளிப்பதோடு, 'அட்வான்டேஜ்' எடுத்துக் கொள்ளவும் சிலர் காத்திருக்கலாம்.

● ஆண் ஊழியர்களின் அசட்டுத்தனமான 'அடல்ட்ஸ் ஒன்லி' ஜோக்குகளை ரசிக்கவும் கூடாது; ரசிப்பதாகக் காட்டிக் கொள்ளவும் கூடாது.

● பெண்களுக்கு உரிய பிரச்னைகளைக் காரணமாகக் கூறி, அலுவலக நேரம் மற்றும் வேலைப் பளுவில் அடிக்கடி சலுகை கேட்பது தவறு. காலப்போக்கில் மற்றவர்கள் இந்தப் போக்கை விரும்ப மாட்டார்கள்.

தொகுப்பு : ஜி.எஸ்.எஸ்.





• திருவடி சேர்க்கும் திருக்குளம்



• கோவிலுக்கு வெளியே

'களத்தில் கல்கி' பகுதியில் வடசென்னையை முற்றிலுமாகப் புறக்கணிப்பது நியாயமா? என்று ஏரான வாசகர்கள் போனில் முறையிட ஆரம்பித்து விட்டார்கள். எங்கள் திருவொற்றியூர் கோவிலை வந்து பார்த்து எழுதுங்களேன் என்றனர் மற்றும் சிலர். புறப்பட்டோம். இரண்டாவது முறையும் அறநிலையத்துறை அமைச்சரை அழைத்துக் கொண்டு விசிட் செய்வது சாத்தியமல்ல என்பதோடு அவரைச் சிரமப்படுத்துவதும்கூட. அதனால் நாமே ஒரு திடீர் விசிட் செய்தோம்...

'இங்கேயிருக்கிற நீர்நிலைகளெல்லாம் தீர்த்தம்; இங்கே இருக்கிற மணல் எல்லாம் திருநீறு. பூவுலகத்தில் இதுதான் சிவலோகம் என்று பெரிய பெரிய தவமுனிவர்களெல்லாம் சொல்கிறார்கள்...' என்பதை 'வாவியெலாந் தீர்த்தம் மணலெல்லாம் வெண்ணீறு...' என்று பரவசப்பட்டுப் பாடுகிறார் பட்டினத்தார்!

எந்தத் திருத்தலத்தை? அருள்மிகு தியாகராஜ சுவாமி எழுந்தருளியிருக்கும் திருவொற்றியூர்த் திருத்தலத்தைத்தான் இப்படிப் பாடுகிறார் பட்டினத்தார்!

# திருவொற்றியூர் கோவிலுக்கு ஒரு



• நந்தவனமா இது!



# ஐயோ பாவம் ஆதிபுரீஸ்வரர்!

நாயகிக்கும் தனி சந்நிதி.

விஸ்தீரணமான இடத்தில் ஆலயம் அமைந்திருப்பதால் அமைதி தவழும் சூழ் நிலை. அருமையான திருக்குளம். மிகப் பெரிய நந்தவனம்.

இவ்வாலயத்தில் அமைந்துள்ள வட்டப் பாறையம்மனுக்கு நேர்ந்து கொண்டால் நினைத்ததெல்லாம் நடக்கும் என்கிற நம்பிக்கை. அதனாலேயே கடந்த பொதுத் தேர்தலுக்கு முன்பு ஜெயலலிதாவும் உடன் பிறவாச் சகோதரியும் இவ்வாலயத்துக்கு வந்து வட்டப் பாறையம்மனைத் தொழுது சென்றிருக்கிறார்கள். ஆளுக்கொரு ஆட்டையும் கொண்டு வந்து இக்கோயிலுக்குக் காணிக்கையாக விட்டுச் சென்றிருக்கிறார்கள். தேர்தல் முடிவுகளுக்குப் பிறகு அவர்கள் வரவில்லை யென்றாலும் வளர்ப்பு மகன் வந்து வழிபட்டுச் சென்றிருக்கிறார்!

ஆனாலும் என்ன பயன்? இந்தத் திருக்கோயில் கவனிப்பாரற்ற நிலையில் தான் இருக்கிறது. பூத்துக் குலுங்க வேண்டிய நந்த வனம் புதர்க் காடாகத்தான் காட்சியளிக்கிறது.

• ராஜகோபுரம்



இவா மட்டுமா? தேவாரம் பாடிய மூவரும் சரி, மாணிக்கவாசகரும் சரி, அருணகிரிநாதரும் சரி, அனைவருமே இத் திருத்தலத்தின் பெருமைகளைப் பாடிப்பாடிப் புகழ்ந்திருக்கிறார்கள். அண்மையில் வாழ்ந்த இராமலிங்க அடிகளும் இத்தலத்தின் புகழ் பாடியிருக்கிறார்.

சுயம்புலிங்கமாகக் காட்சி தரும் மூலவர் பெயர் ஆதிபுரீஸ்வரர். திரிபுரசுந்தரி சமேத ராய்க் காட்சிதரும் உற்சவர் பெயர்தாம் தியாகராஜர். தியாகராஜருக்கு ஒற்றீஸ்வரர் என்று இன்னொரு சந்நிதியும் உண்டு.

'வான்தேட நான்கு மறைதேட மாலுடன் வாரிசமேலோன் தேட மற்றை அருந்தவர் தேட என் அன்பின்மையால் யான் தேட என்றுளஞ்சேர் ஒற்றியூர் எம் இருநிதியே யான்தேடும் வாட்கண் மயிலே வடவுடை மாணிக்கமே.' என்று இராமலிங்க அடிகளார் பாடிப் புகழ்ந்த அம்மன் வடிவுடை

**திடீர் விசிட்!**



• அம்மாள் வெளிப்பிரகாரம் : அபிஷேக நீர் வெளியேறாததால் முடை நாற்றம்...

திருக்குளத்தின் கதி பற்றிச் சொல்ல வேண்டாம். அதன் படியிறங்கிச் செல்வோருக்கெல்லாம் பரகதி நிச்சயம். இம்மாத ஆரம்பத்தில் கூட இருவர் இத்திருக்குளத்தில் பிணமாகியிருக்கிறார்கள். பசசைப் பசேல் என்று பாசிபடிந்து கிடக்கும் திருக்குளம் புதை சேறாகக் கிடப்பதால், கால் வைக்கும் பக்தர்களைக் கைலாசத்துக்கு அனுப்பி விடுகிறது.

தினசரி வரும் பக்தர்களின் எண்ணிக்கை குறைவுதான் என்றாலும் பௌர்ணமியன்று ஏகத்துக்குக் கூடுகிறார்கள் பக்தர்கள்.

காரணம்? மீஞ்சூரிலுள்ள திருவுடையம்மனையும் திருமுல்லைவாயிலிலுள்ள கொடியுடையம்மனையும் இங்குள்ள வடிவுடையம்மனையும் பௌர்ணமியன்று வழிபட்டால் நினைத்தது நடக்கும் என்கிற நம்பிக்கை.

இப்படிப்பட்ட நம்பிக்கையோடு வருபவர்கள், அம்மனின் அழகிய திருக்கோலத்தைத் தரிசனம் செய்துவிட்டு, உள்பிராகாரத்தை வலம் வந்து, வெளிப்பிராகாரத்தையும் வலம் வந்து வழிபடலாமே என்று புறப்படுகிறவர்களுக்கு அதிர்ச்சிதான் காத்திருக்கிறது. அதாவது வெளிப்பிராகாரத்தை வலம் வரவே முடியாதபடிக்கு வேலிபோட்டு விட்டார்கள்.

வேலி * போட்டதற்குக் காரணம், அம்மனின் சந்நிதி திருக்குளத்தை ஒட்டியிருப்பதால், பக்தர்கள் அந்த வழியாகச் செல்கிறபோது, யாரும் ஆசைப்பட்டுத் திருக்குளத்தில் இறங்கி ஈசனின் திருவடியடைந்து விடக் கூடாது என்கிற நல்லெண்ணத்தில்தான் என்று கோயில் தரப்பில் சொல்லப்படுகிறது.

என்றாலும் அம்மன் சந்நிதியோடு சேர்த்துத் திருக்குளத்தையும் வலம் வந்தால் மேலும் புண்ணியமாயிற்றே என்று நாங்கள் சென்றபோதுதான் அது எவ்வளவு பெரிய விபரீத ஆசை என்பதை உணர முடிந்தது.

அத்தனையும் புதர். செருப்புக் காலோடு நடப்பதே பெரும்பாடு என்கிற நிலையில் வெறுங்காலோடு நடப்பது எத்தனை பெரிய சிரமம் என்பதை அனுபவ ரீதியாகத்தான் உணர வேண்டும். இருப்பினும் மனம்தளராத விக்கிரமனைப்போல் வலம் வரத் தொடங்கினோம்.

அம்மன் சந்நிதியின் வெளிப் பிராகாரத்தின் ஒருபுறத்தையடைந்ததும் ஒரே முடை நாற்றம். விஷயம் இதுதான். அம்மனுக்கு அபிஷேகம் செய்கிற நீரெல்லாம் ஒரு புறம் வெளியேறித்தானே ஆக வேண்டும்? அப்படி வெளியேறுகிற நீருக்கு ஒரு வடிகால் அமைக்க வேண்டாமா? அமைக்கவில்லை என்பதால், எல்லாம் தேங்கி அப்படியொரு முடைநாற்றத்தை உற்பத்தி செய்து கொண்டிருக்கிறது.

இருப்பினும் இதுவொரு பழம்பெருமை வாய்ந்த திருத்தலம். ஆதிபுரீஸ்வரர் பிராகாரத்தில் என்னதான் வௌவால் புழுக்கை நாற்றமடித்தாலும், அகத்தியருக்கும் சுந்தரருக்கும், கல்யாண சுந்தரராக ஈசன் நேரில் தோன்றிக் காட்சி தந்த தலம் இது. எனவே, இதன் தலபுராணத்தை முழுமையாகத் தெரிந்து கொள்ளலாமே என்கிற ஆர்வத்தில் 'தலபுராணம் கிடைக்குமா' என்று கோயில் அலுவலகத்தில் விசாரித்தோம்.

ஆறு ரூபாய் விலை என்று ஒரு புத்தகத்தைக் கொடுத்தார்கள். வாங்கிப் பார்த்தால், அதில் தேவாரம் பாடிய மூவர் முதல் பலரும் பாடிய பாடல்களின் தொகுப்புத்தான் இருந்ததே தவிர, தலத்தின் பெருமைகளை விளக்கும் விதமாக எதுவுமே இல்லை.

விசாரித்தபோது, ஒரு குருக்களின் பெயரைச் சொல்லி, 'அவரிடம் போய் விசாரியுங்கள். முழுமையாகச் சொல்லுவார்' என்றார்கள். விசாரித்தோம்.

''எனக்கு இப்போது சொல்ல இஷ்டமில்லை!'' என்றார் முகத்தில் அடித்த மாதிரி.

இருந்தாலும் அவர் மனம் இளகிச் சொல்லக்கூடும் என்கிற நம்பிக்கையில் மேலும் காத்து நின்றோம்.

''என்னை நீங்கள் ஒன்றும் பலாத்காரப் படுத்திப்பேச வைக்க முடியாது. கோயில் ஆபீஸில் போய் விசாரித்துக் கொள்ளுங்கள்!'' என்று கறாராகச் சொல்லி விட்டார்.

வேறு வழியின்றிக் கோயில் அலுவல

கத்துக்குச் சென்றபோது, அலுவலகம் தொடங்குவதற்கு இன்னும் நேரம் இருந்ததால் நிர்வாக அதிகாரி வரவில்லை. வந்திருந்த அலுவலக ஊழியரிடம் நம்மை அறிமுகப் படுத்திக் கொண்டு விசாரித்தபோது, அவர் கோயிலின் பரம்பரை அறங்காவலரான தி. கல்யாணசுந்தரத்தைப் போனில் தொடர்பு கொண்டு நம்மிடம் கொடுத்தார்.

"இத்தனை சிறப்பு வாய்ந்த கோயில், கொஞ்சமும் பராமரிப்பின்றிக் கிடக்கிறதே?"- டெலிபோனில் கேட்டோம்.

"முன்பு ஜெயலலிதா ஆட்சியின்போது, இந்தக் கோயிலைச் சுத்தப்படுத்திப் பராமரிப்ப தற்காக இரண்டு லட்ச ரூபாய் கொடுத்தார் கள். நாங்களும் வேலைகளைத் துவங்கலாம் என்று ஆரம்பிக்கிற சமயத்தில், என்ன காரணத்தாலோ கொடுத்த பணத்தைத் திரும் பவும் வாங்கிக் கொண்டு விட்டார்கள். நாங்கள் என்ன செய்ய முடியும்?"

"தல வரலாறு கூட இங்கே கிடைக்க வில்லையே. அற்காகவாவது நீங்கள் நட வடிக்கை எடுக்கக் கூடாதா?"

"இப்போது அச்சாகிக் கொண்டிருக்கிறது. நல்ல விரிவான வரலாறு இன்னும் சில நாட்களில் தயாராகி விடும். நான் உங்களுக்கு அனுப்பி வைக்கிறேன்."

"கோயில் பிரசாதம் விற்கிற இடத்தில் விலைகளோடு சேர்த்து ஒவ்வொரு பிரசாத மும் இருக்க வேண்டிய எடை அளவுகளும் எழுதப்பட்டிருக்கின்றன. அளவுகளெல்லாம் சரியாக இருக்கின்றனவா?"

"இருக்கும்."

"நாங்கள் அறநிலையத்துறை அமைச்சரை அழைத்துக் கொண்டு வடபழனி ஆலயத் துக்குச் சென்று பிரசாதங்களின் எடையைப் பரிசோதனை செய்தபோது, எதுவுமே சரி யான எடையில் இல்லை. அதனால்தான் கேட்கிறோம்."

"நாங்கள் அடிக்கடி சரிபார்க்கிறோம். நீங்கள் சொன்னதால் மறுபடியும் சரிபார்க் கிறோம்."

"கோயில் தேவஸ்தானமே பக்தர்களின் காலணிகளை வாங்கி வைக்கிறது என்று கேள்விப்பட்டோம். ஆனால் தேவஸ்தான ஆட்கள் யாருமே இல்லை. தனியார்கள்தாம் இருக்கிறார்கள். விசாரித்தபோது, தேவஸ்தான ஆட்களுக்குச் சம்பளம் தரப்படாததால் அவர் கள் வேலைக்கு வரவில்லை என்று சொன் னார்கள்."

"உண்மைதான். மூன்று மாதங்களாக அவர்களுக்குச் சம்பளம் தரவில்லை."

"ஏன் அப்படி?"

"அறநிலையத்துறை ஆணையர்தான் அவர்களுக்கான சம்பளத்தை சாங்ஷன் செய்ய வேண்டும். இன்னும் செய்யவில்லை. நாங்கள் என்ன செய்ய முடியும்?"

"இது பற்றியெல்லாம் நீங்கள் ஆணை யருக்கு எழுதியிருக்கிறீர்களா?"

"எழுதியிருக்கிறோம். பதில்தான் இல்லை!" என்றார் பரம்பரை அறங்காவலர் தி.கல் யாணசுந்தரம்.

**வி**டை பெற்றுக் கொண்டு வெளியில் வந்தோம். காலணிகளை விட்டுச் சென்ற நபரிடம் ஜோடிக்கு ஐம்பது பைசா வீதம் மூன்று ஜோடிக்கு ஒன்றரை ரூபாய் கொடுத் தோம்.

சம்பந்தப்பட்ட நபர் "ஒரு ஜோடிக்கு இருபத்தைந்து பைசாதான் சார்!" என்று பதறியபடி, எழுபத்தைந்து பைசாவைத் திருப்பிக் கொடுத்தார்.

"காலணிகளை நாங்கள் விட்டுச் செல்கிற போது ஒரு ஜோடிக்கு ஐம்பது பைசா என்று நீங்கள்தானே சொன்னீர்கள்?"

"இல்லவே இல்லை சார். ஒரு ஜோடிக்கு இருபத்தைந்து பைசாதான் வாங்குகிறோம்..." என்றார் அவசரமாக.

ஆனால் நிஜம் அது இல்லை. நாம் யாரென்பது தெரிந்து போனதால்தான் அப்படிச் சொன்னாரே தவிர, மற்றபடி பக்தர் களிடம் ஐம்பது பைசாதான் வாங்கிக் கொண் டிருக்கிறார்கள்!

**கோ**யிலுக்கு வெளியிலும் ஒரு பெரிய குளம்- சுகாதாரக் கேட்டைப் பரப்பும் குப்பைத் தொட்டியாக.

புதிய அரசுக்கும் அறநிலையத் துறை அமைச்சருக்கும் ஏகப்பட்ட வேலைகள் காத்திருக்கின்றன. மக்களும் நிறைய எதிர் பார்க்கிறார்கள். பழைய அரசுபோல் ஏமாற்ற மாட்டார்கள் என்று நம்புகிறோம்.

**- இளங்கோவன், ஸ்ரீநிவாசன்**
படங்கள்: **பேஜர் கே. மூர்த்தி**

---

"மாப்பிள்ளை வீட்டைச் சேர்ந்தவங்க எல்லாம் கணக்குல ரொம்ப 'வீக்'கான ஆசாமிங்களா இருப் பாங்கன்னு எப்படிச் சொல்றீங்க?"

"சீர்வரிசை லிஸ்டிலே கால்குலேட்டர் ஒண்ணும் போட்டிருக்கீங்களே, எதுக்குன்னு சம்பந்திகிட்டே கேட்டேன். 'பையனோட மொய்ப்பணக் கணக்கை கூட்டி சரிபார்க்கத்தான்'னு சொல்றாரே!"

– ஆலத்தம்பாடி ராஜகோபால்





• 'ஸ்ரீ கிருஷ்ணா'



• ராமாயணம்: பிள்ளையார் சுழி

# சின்னத் திரையில் புராண பிஸினஸ்!

சமீப காலமாக டீவி சானல்களில் பல புராண சீரியல்கள் புற்றீசல் போலப் புறப்பட்டிருக்கின்றன. ஜெய்துர்கா, தசாவதாரம், ஸ்ரீதிருப்பதி பாலாஜி, ஓம் நமச்சிவாய, ஸ்ரீகணேசா, கீதையின் ரகசியம் என்று பெரிய பட்டியலே போடலாம். இதைவிட விசேஷம், ஒரே நேரத்தில், ஹனுமான் பற்றியே இரண்டு சீரியல்கள் ஒளிபரப்பாகின்றன என்பது. சோனி டீ.வி.யில் ஜெய் வீரஹனுமான். மெட்ரோ சானலில் வருபவர் ஜெய்ஹனுமான்.

இதுபோன்ற புராண தொடர்களுக்கெல்லாம் பிள்ளையார் சுழி போட்ட பெருமைக்குரியவர் ராமானந்த சாகர். பத்தாண்டுகளுக்கு முன்பு ஒளிபரப்பான அவருடைய ராமாயணம், ஒளிபரப்பான ஞாயிற்றுக்கிழமை காலைகளில், நாடே ஸ்தம்பித்துப் போய் விட்டதோ என்று நினைக்கும் அளவுக்கு, மக்களை டீ.வி. பெட்டிகள் கட்டிப் போட்டதை மறக்க முடியாது. ராமாயணம், அதனையடுத்து மகாபாரதம் ஆகிய இரண்டு மெகா தொடர்களும் ஒளிபரப்பான பிறகு, கொஞ்ச நாட்களுக்கு வேறு யாருமே புராணத் தொடர்கள் எடுக்க முன்வரவில்லை. காரணம் ராமாயணம், மகாபாரதம் அளவுக்கு இன்னொரு தொடர் எடுக்க முடியுமா என்ற மலைப்புத்தான்!

அதனால்தானோ என்னவோ, ராமானந்த் சாகரே மீண்டும் ஒரு புராண மெகா தொடர் தயாரித்து, மறுபடி சின்னத் திரை வரலாற்றிலே ஒரு புதிய அத்தியாயத்தைத் துவக்கி வைத்தார் – 'ஸ்ரீகிருஷ்ணா'. ஆனால் ஏதோ பாலிடிக்ஸ் காரணமாய், தூர்தர்ஷன் அதனை ஒளிபரப்புவதற்கு அனுமதி தர மறுக்க, சாகர் மனம் தளரவில்லை. ஸ்ரீகிருஷ்ணா தொடரை இந்தோனேஷியா, மொரிஷியஸ், கனடா, நேபாளம், தாய்லாந்து போன்ற அயல்நாட்டு டெலிவிஷன் நெட் ஒர்க்களில் ஒளிபரப்ப ஏற்பாடு செய்தார். தூர்தர்ஷன், மெட்ரோ சானல் துவக்கியவுடன், அதிலே கிருஷ்ணருக்கு இடம் கிடைத்தது.

மெட்ரோவின் 'டாப் 10' ரேட்டிங்கில் தொடர்ந்து இடம்பிடித்து, பாபுலாரிடியை தக்கவைத்துக் கொண்ட கிருஷ்ணா தொடர்தான் இன்று பலரையும் புராணத் தொடர்கள் எடுக்கத் தூண்டியிருக்கிறது. இதைத் தவிர, இன்னொரு காரணமும் உண்டு. நம் மக்களுக்கு இருக்கும் பக்தியும், புராணக் கதைகள் மீதான ஈடுபாடும்தான் அது.

ஹாலிவுட்டில், ஆங்கிலப் படங்கள் எடுத்துக் கொண்டிருந்த அசோக் அமிர்தராஜ் (சாட்சாத் டென்னிஸ் வீரரேதான்) இன்று இந்தியாவில், சின்னத் திரைக்காக சீரியல்கள் எடுப்பதற்கென்றே பல கோடி பட்ஜெட் ஒதுக்கியுள்ளார் என்பது புதிய செய்தி. மர்மத் தொடர், நகைச்சுவை என்று ஒன்றிரண்டு இருந்தாலும், அவர் தயாரிக்கப்போவதில் மெஜாரிடி, புராண சப்ஜெக்ட்கள்தாம்.

ராமானந்த சாகர் கூட்டுத் தயாரிப்பில், 'ஸ்ரீ துர்கா', சன் டீ.விக்காக 'தசாவதாரம்' தூர்தர்ஷனுக்காக 'ஸ்ரீ திருப்பதி பாலாஜி' என்று

சிறு பட்டியல் சொல்கிறார் அசோக் அமிர்த ராஜ்.

புராணத் தொடர்கள் எடுப்பதில் இன்னொரு அனுகூலமும் உண்டு. கதையை நீட்டிக் கொண்டே போகலாம். காட்சிகள் மூலம் பார்ப்பவரைக் கவரலாம். தந்திரக் காட்சிகள் மூலம் பிரமிக்க வைக்கலாம்.

பொதுவாக, ஒரு டீ.வி. தொடர் ஆரம்பித்து, பிக்அப் ஆக ஐந்தாறு வாரங்கள் ஆகின்றன. பிக்அப் ஆகி, பாபுலராக இருக்கும் போதே, பதிமூன்றாவது வாரத்தில் கதையின் கழுத்து முறிக்கப்பட்டு, 'முற்றும்' போடப்படுகிறது. இதைப் பல விளம்பரதாரர்கள் விரும்பவில்லை. 'இதனால் மெகா தொடர்கள் விளம்பரதாரர்களால் விரும்பப்படுகின்றன' என்கிறார்கள், விளம்பர ஏஜன்ஸி வட்டாரத்தில்.

இவர்களது விருப்பத்தைப் பூர்த்தி செய்யும் விதமாக புராணத் தொடர்கள் தயாரிப்பவர்களும் கதையை ஜவ்வாக இழுத்தாலும், விறுவிறுப்பைத் தக்கவைத்துக் கொண்டிருக்கிறார்கள். மகாபாரதத்தில் ஒரு சிறு பகுதியான கீதோபதேசம், 'ஸ்ரீ கிருஷ்ணா' தொடரில் 30 முதல் 35 வாரங்கள் வரை இடம் பெற்றுள்ளது இதற்கு ஒரு உதாரணம்.

இந்தத் தொடர்களில் நடிக்க பெரிய ஸ்டார்கள் அவசியமில்லை. அதே நேரம், இந்தத் தொடர்களில் நடிப்பதன் மூலம் ஸ்டார் அந்தஸ்து பெற்றவர்கள் பட்டியல் அனுமார் வாலாய் நீளும்!

"தமிழ் போன்ற பிராந்திய மொழிகளில், புராணத் தொடர்கள் எடுப்பது என்பது வர்த்தக ரீதியாக சிரமமான காரியம். அதனால்தான், மெகா தொடர்களின் டப்பிங் செய்த ஒளிபரப்பைத் தவிர்க்க முடியவில்லை" என்கிறார் சன் டீ.வி.யின் கலாநிதி மாறன்.

"ஐந்து கோடி ரூபாய் பட்ஜெட்டில் தயாரிக்கப்படவுள்ள 'ஸ்ரீதுர்கா', பதினைந்து மொழிகளில் ஒளிபரப்பாகப் போகிறது" என்கிறார் அசோக் அமிர்தராஜ்.

ஒருபக்கம், ஜிகினா செட் போட்டு, புராணத் தொடர்கள் எடுக்கப்பட்டுக் கொண்டிருந்தாலும், அதிலும் கம்ப்யூட்டர் ஜாலங்கள் செய்யத் துவங்கி விட்டார்கள். 'கணேசா' தொடரில் நடிக, நடிகையர் நீலத்திரை பின்னணியில் நடிக்க, அதைப் படம்பிடித்துக் கொண்டு, கம்ப்யூட்டர் மூலமாய் தேவையான மாதிரி செட்களைத் திரையில் உருவாக்கி, இணைக்கப் போகிறார்கள். இந்திய சின்னத்திரை வரலாற்றில் இது ஒரு புரட்சியாக இருக்கும் என்கிறார்கள்.

**சில கொசுறு தகவல்கள்**

- ஜெய் ஹனுமான் தொடரின் தயாரிப்பாளர், திப்புகல்தான் புகழ் சஞ்சய்கான். இதில் ராமாயண ராமன் 'அருண்கோவில்'தான் ராமர். ஹனுமான் தாராசிங்கின் மகன் 'விந்தூ'தான் இந்தத் தொடரில் ஹனுமான்.
- கணேசா தொடரில், ஒரு எபிசோடுக்கான தயாரிப்புச் செலவு 30 லட்சம் தொடுமாம்!
- மகாபாரத கிருஷ்ணர், நிதிஷ் பரத்வாஜ் தாமே கிருஷ்ணனாய் நடிக்க, ஒரு தொடர் தயாரிக்கிறார். பெயர் : 'கீதையின் ரகசியம்'
- கணேசா தொடரில் பார்வதி ரோலுக்கு மகாபாரத திரௌபதி புகழ் ரூபா கங்குலி தேர்வாகியுள்ளார்.
- 'புரொடக்‌ஷன் தரம் குறைவு' என்ற காரணம் காட்டி, ஜீ டீ.வி.யில் ஒளிபரப்பாகிக் கொண்டிருக்கும் 'மா' புராணத் தொடர், விரைவிலேயே நிறுத்தப்படவிருக்கிறது.

**- எஸ். சந்திரமௌலி**

• 'ஜெய் ஹனுமான்'






"தேர்தல் செலவுக்கணக்கையெல் லாம் ஆடிட் பண்ணணும்னா மூணு மடங்கு சார்ஜ் பண்ணுவோம்..."

"எனக்கு அந்த ஒப்பந்தத்துல வர்ற அக்ஷரத்துகள்லாம் புரியவேயில்லை... எப்படிக் கையெழுத்துப் போடறதாம்!"




## இஹி... ஹாஹ் ஹா...

"எல்லாம் எங்க ஆளுங்கதான்... மதுவிலக்கு ஒழுங்கா அமுலாகிற தான்னு பார்க்கப் போன இடத்துல கள்ளச் சாராயம் குடிச்சுட்டாங்க..."




"நம்ம பேர்ல கிரிமினல் குற்றம் சாட்டின பத்திரிகைக்காரங்க பேர்ல மானநஷ்ட வழக்குப் போடறேங்கறீங் களே! அவங்க அதுல தண்டனை பெற்று ஜெயிலுக்குப் போனா... அங்கே யிருக்கிற கைதிகள்லாம் நம்மைப் பத்தின உண்மைகளை ஆதாரத் தோடச் சொல்லிடுவாங்க..."




— இந்தியன் பீச்சர்ஸ் சிண்டிகேட்

# ஜாலி போட்டி - 9

## பரிசு ரூ. 5000/-

உலகிலேயே மிகச் சுலபமான விஷயம் ஒன்று உண்டென்றால் அது இந்த வாரப் போட்டிக்கு பதில் எழுதுவதுதான்.

கீழே தரப்பட்டுள்ள சில சொற்றொடர்கள், இந்த இதழில் வெளியாகியிருக்கும் கதை, கட்டுரைகளிலிருந்தே எடுக்கப்பட்டவை. நீங்கள் செய்ய வேண்டியது, இவற்றைச் சொன்னது யார், எந்தக் கதை அல்லது கட்டுரையில் இவை இடம் பெற்றிருக்கின்றன என்பதைக் கூப்பனில் எழுதி **7.10.96க்குள்** எங்களுக்கு அனுப்ப வேண்டியதுதான். சரியாகச் செய்பவருக்குப் பரிசு ரூ. 5000/-. பலர் சரியாக எழுதிவிட்டால் குலுக்கலில் ஒருவர். ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

1. "ஸ்ரீ துர்கா, பதினைந்து மொழிகளில் ஒளிபரப்பாகப் போகிறது."
2. "இந்த டான்ஸ் நல்ல ரோல் தானுங்களா?"
3. "ஆ, வலிக்கறது."
4. "அந்தக் காரியம் அவன் பண்ண மாட்டான்."
5. "நாடகம் எனக்கு ஒரு விசுவாசமுள்ள மனைவியைப் போல."
6. "என் பங்கு இருபத்தைந்து சதவீதம் தான்!"
7. "மதச்சார்பின்மைதான் அவசியம்."
8. "அடடே, அப்படியொரு கட்சி இருக்கிறதா?"
9. "நகைச்சுவை உணர்வு ஒன்றுதான் மனிதனை வாழ வைக்கிறது!"
10. "ஆபத்தா? சேஷனாலா?"

### ஜாலி போட்டி - 9

| என் | பேசுபவர் | கதை/கட்டுரை |
|---|---|---|
| 1. | | |
| 2. | | |
| 3. | | |
| 4. | | |
| 5. | | |
| 6. | | |
| 7. | | |
| 8. | | |
| 9. | | |
| 10. | | |

பெயர் : ....................................................................................

முகவரி : ....................................................................................

....................................................................................

....................................................................................



1996 செப்டெம்பர் 29
தாது புரட்டாசி 13
மலர் : 55
இதழ் : 9

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## குட்டிச்சுவராகிப் போன கூட்டுறவுத் தத்துவம்!

'கூட்டுறவே நாட்டுயர்வு'; 'கூடி வாழ்ந்தால் கோடி நன்மை' என்றெல்லாம் லட்சிய கோஷங்கள் எழுப்புகையில் கேட்க மிக நன்றாகவே இருக்கிறது.

ஆனால் தமிழ்நாட்டில் சமீபத்தில் நடந்துள்ள சம்பவங்களைப் பார்க்கையில் கூட்டுறவுத் தத்துவமே கேலிக்கு உள்ளாக்கப்பட்டு, சிரிப்பாய்ச் சிரிப்பதைத்தான் காண்கிறோம். கூட்டுறவுத் தேர்தலுக்கான வேட்புமனுத் தாக்கலிலேயே ஏராளமான ஊழல் நடந்திருக்கிறது!

கும்பகோணத்திலிருந்து நமக்கு வந்திருக்கும் கடிதம் ஒன்று, அங்கே நடைபெற்ற ஒரு கூட்டுறவுச் சங்கத் தேர்தலுக்கு வேட்புமனுத் தாக்கல் செய்யப்பட்டபோது நடந்த அநியாயத்தை விவரிக்கிறது :

காலை பதினோரு மணிக்கு ஏழு தி.மு.க. வேட்பாளர்களிடமிருந்து வேட்புமனுக்களைப் பெற்றுக் கொண்ட அதிகாரி 'நெஞ்சுவலி' என்று டாக்டரிடம் புறப்பட்டுப் போயிருக்கிறார். மாலை மூன்று மணிக்குத் திரும்பி வந்தவர், வேட்பு மனுத்தாக்கல் நேரம் முடிந்துவிட்டது என்று கூறி, அந்த ஏழு தி.மு.க. வேட்பாளர்கள் வெற்றி பெற்றதாக உரிய காலத்தில் அறிவிக்கப்படும் என்றும் சொல்லியிருக்கிறார்!

கூட்டுறவுச் சங்கத் தேர்தல்களே கேலிக்கூத்தாகிவிட்டன என்பதற்கு இந்த ஒரு சம்பவம் தவிர வேறு பல சான்றுகளும் உள்ளன.

சென்னை, தியாகராயநகர் கூட்டுறவு வங்கித் தேர்தலின் வேட்புமனு தாக்கலின்போது, வன்முறையே வெடித்திருக்கிறது! சி.பி.ஐ.எம் வேட்பாளர்கள் வேட்பு மனுத்தாக்கல் செய்யவிடாமல் தடுத்து நிறுத்தப்பட்டிருக்கிறார்கள். முதல்வர் இந்தக் கூட்டுறவு அமைப்புக்கு மறு தேர்தல் நடத்தப்பட வேண்டும் என்று உத்தரவிடும் அளவுக்கு, நிலைமை மோசமாகியிருக்கிறது!

பொதுவாகவே கூட்டுறவுத் தேர்தல்கள் நேர்மையாக நடைபெறவில்லை; கள்ளவோட்டுகள் பரவலாகப் போடப்பட்டன; எனவே மறுதேர்தல் நடத்தப்பட வேண்டும் என்று ம.தி.மு.க. தலைவர் வை.கோபாலசாமி வேறு வலியுறுத்திப் பேசியிருக்கிறார்.

இவற்றையெல்லாம் பார்க்கும்போது, கூட்டுறவுச் சங்கங்களில் கட்சி சாயம் ஏறிப் போயிருப்பதும், அவற்றின் நல்ல நோக்கம் அடியோடு வீணடிக்கப்பட்டிருப்பதும் தெளிவாகத் தெரிகிறது.

பொதுச் சந்தையில் கிடைப்பதைவிட குறைந்த விலையில், நல்ல பொருள்களை மக்களுக்குக் கிடைக்கச் செய்ய வேண்டும் என்பதே கூட்டுறவுகளின் நோக்கம். ஆனால், கூட்டுறவுச் சங்க உறுப்பினர் சேர்க்கையிலேயே கட்சி அரசியலின் ஊடுருவல் ஆரம்பமாகி விடுகிறது. உறுப்பினர்கள் கட்சிக்காரர்களாக அமையும்போது பொதுநலனைக் காட்டிலும் கட்சி நலனும் - இன்றைய சூழலில் அதனுடன் இணைபிரியாததாகி விட்ட சுயநலனுமே மேலோங்குகின்றன. பொதுநலனோ, மக்கள் நலனோ ஒரு பொருட்டாகவே இருப்பதில்லை.

மேலும், இந்த அரசியல் புகுத்தலினால் பொதுத் தேர்தல்களில் நடப்பது போலவே, கூட்டுறவுத் தேர்தல்களிலும் பணம் புகுந்து விளையாடுகிறது. தேர்தலுக்காகச் செலவழித்த தொகையைத் திரும்பச் சம்பாதிக்கும் தீய நோக்கமும் உறுப்பினர்களை ஆட்டுவிக்க, கூட்டுறவுச் சங்கங்களில் ஊழல், லஞ்ச-லாவண்யங்கள் பெருகித் தழைக்கின்றன.

நுகர்வோர் கூட்டுறவுகளும் கூட்டுறவு வங்கிகளும் அதீத லாப நோக்கின்றிச் செயல்படும் சேவை அமைப்புகளாக விளங்க வேண்டும். அவ்வாறு அவை விளங்கினால், அவற்றில் முக்கிய



பதவிகள் வகிக்க முன்வருவோரும் ஓரளவு இலட்சிய நோக்கு படைத்தவர்களாகவே இருப்பார்கள். ஆனால், இன்று கூட்டுறவுச் சங்கங்களில், வேட்பு மனுத்தாக்கலுக்கே அடிதடி நடப்பதைப் பார்க்க, அப்பதவிகள் பணம் பண்ணும் பதவிகளாகி விட்டன என்பது தெளிவாகத் தெரிகிறது.

வங்கிப் பதவிகளில் உள்ளவர்கள், கடன் வினியோகிப்பில் கமிஷன் அடிப்பதும், நுகர்வோர் அமைப்பு நிர்வாகிகள் கொள்முதலில் கமிஷன் அடிப்பதும் சர்வசாதாரணமாகி விட்டன! இதனால் மக்களுக்கு நியாய விலையில் கிடைக்க வேண்டிய பொருட்கள் அனாவசியமாய் விலையேற்றம் காண்கின்றன.

வெளி விலைகளைக் காட்டிலும் கூட்டுறவுச் சங்க விலைகள் சிறிதேனும் சகாயமானவை என்ற எண்ணத்தில் மக்கள் அச் சங்கங்களை ஆதரிக்கக்கூடும். ஆனால், மக்களுக்கு, கூட்டுறவுச் சங்கங்கள் மூலம் போய்ச் சேரவேண்டிய முழு ஆதாயமும் போய்ச் சேருவதில்லை என்பதுதான் உண்மை. அரசியல், சுயநல புகுத்தல்களால் பொருள்களின் தரமும் பெரிய அளவுக்குப் பாதிக்கப் படுகிறது.

'எல்லோரும் எல்லாமும் பெற வேண்டும்' என்ற கூட்டுறவுக் கொள்கையைச் செயலாக்குவது இயலாத காரியம் என்று கூறிவிட முடியாது. அரசாங்கம் மனம் வைத்தால், பொது மக்களும் விழிப்புடன் இருந்தால், அந்தக் கனவு மெய்ப்படும்.

ஆனால், இத்தகைய மறுமலர்ச்சிக்கு எந்த முயற்சியும் செய்யப்படாத ஒரு நிலையில், ஒரு சிறந்த கோட்பாடு, அநீதிகளுக்கும் பொதுப் பணச் சுரண்டலுக்கும் மட்டுமே பயன்படுத்தப்படுவதைப் பார்த்துக் கொண்டிருப்பது மிகவும் ஆபத்தானது.

இதைப் பார்க்க, கூட்டுறவு அமைப்புகளை இழுத்து மூடச் செய்து விடுவதே மேலாக அமையும். பொதுச் சந்தையில் ஆரோக்கியமான போட்டியினிடையே வியாபாரம் நடக்கும்போது விலைகள் ஸ்திரப்பட்டு, தரமும் உயருவதற்கான வாய்ப்புகள் இருக்கின்றன.

# சிரிக்காமல் விடமாட்டேன்!





''உங்களோட முகத்துல சிரிப்பைக் கண்டு ரொம்ப நாளாயிடுச்சு தலைவரே...''

''சும்மா இருய்யா, அதெல்லாம் போலீஸ்காரங்க வந்து கைது பண்ணிட்டுப் போறப்பத் தான் வரும்....''

— ஜி. செல்லத்துரை



''என்ன... வெளி நாட்டில் இருந்து தலைவர் மேக்கப் மேனை வரவழைச்சிருக்காரா?''

''பின்னே..... முன்ஜாமீன் கிடைக்கற வரை, மாறுவேஷத்தில் இருந்தாகணுமே!''

— ஏ. சுகுமார்



''ஏங்க கடந்த ஐந்தாண்டு கால ஆட்சி எப்படின்னு நினைக்கிறீங்க?''

''சாதாரண பொது ஜனம் நாங்க. Judgement Error பண்ணிட்டோம்.''

— பழ. சேதுராமன்



''என்ன சார் தலையைப் பிய்ச்சுக் கிட்டிருக்கீங்க?''

''அந்த ஏழு மாடி ஹோட்டலில் நாலாவது மாடியையும் ஆறாவது மாடியையும் மட்டும் இடிக்கச் சொல்லி கோர்ட் உத்தர விட்டிருக்கு!''

— உ. ராஜராஜி



''நம்ம தலைவரு அப்படி என்னத்தை பேசிட்டாருன்னு இப்படி கை தட்டுறாங்க?''

''நான் மட்டும் பிரதமரானால் 'சுதந்தரதின' உரையை 'மெட்ராஸ் தமிழ்ல' பேசுவேன்னு சொன்னாரே, அதுக்குத்தான்!''

— பட்டுக்கோட்டை ராதாகிருஷ்ணன்

''அந்த மூந்நாள் அமைச்சர் மாதிரி நகைச்சுவையா பேச யாராலுமே முடியாது.''

''அப்படி என்ன சொன்னார்?''

''கோடி கோடியா சொத்து சேர்த்து வச்சிருக்கீங்களேன்னு கேட்டா, 'மறுபடியும் ஆட்சிக்கு வரமுடியாமல் போனாலும் ஏழைகளுக்கு உதவணும்கிற நல்ல எண்ணத்துலதான்னு சொன்னாரே!''

— சீர்காழி வி. ரேவதி

# பாலம்

●● கம்ப்யூட்டர், எலெக்டிரானிக்ஸ், பொறியியல் மற்றும் அகௌண்டன்ஸி தொடர்பான எல்லா நூல்களும் மாணவர்களுக்கும் பிறருக்கும் எமது லெண்டிங் லைப்ரரியில் கிடைக்கும்.

— INFOLIB
22, K.V. Apt., 101 G.S.T. Rd.
குரோம்பேட்டை, சென்னை - 44.

●● பார்த்தவுடன் சிலிர்ப்பூட்டக் கூடிய கம்பீரமான பாரதியார் படம் தேவை. 'துக்ளக்' சைஸில் இருக்க வேண்டும். தகுந்த விலை கொடுத்து வாங்கிக் கொள்கிறேன்.

- நா. ரெங்கப்பிரசாத்,
30, பாலாஜி நகர்,
கீழ்கட்டளை, சென்னை - 117.

●● பி.ஈ. சிவில் படித்துக் கொண்டிருக்கிறேன். இரண்டாவது வருடம் புத்தகங்கள் இலவசமாகத் தந்து உதவ வேண்டுகிறேன்.

- பி. சுரேஷ் பாபு,
6/118-1, 4வது பிரதான சாலை,
ஒட்டேரி விரிவாக்கம்,
வண்டலூர், சென்னை - 48.



●● கனரா வங்கி, சிண்டிகேட் வங்கி ஆகியன மூலமாக, வருஷம் முழுவதும் இலவசமாக தொழிற் பயிற்சிகள் அளிக்கப்படுகின்றன. உணவு, தங்குமிடமும் இலவசம். இறுதியில் சான்றிதழ் வழங்கப்படும். விவரத்துக்கு :

இயக்குனர், ஊரக வளர்ச்சி,
மற்றும் சுயவேலை வாய்ப்புப் பயிற்சி நிலையம்,
டி. ஆண்டிப்பட்டி பங்களா,
வாடிப்பட்டி (அ) மதுரை (மாவ) 624 218.

●● என்னிடம் திலகர் எழுதியுள்ள "கீதா ரஹஸ்யம்" என்னும் புத்தகம் - ஆங்கிலப் பதிப்பு உள்ளது. தேவைப்படுவோர் எழுதலாம்.

- என். ஜெயராமன்,
20, மாதவி வீதி, கலெக்டரேட் (அ),
ஈரோடு - 638 011.

●● விஸ்வகர்மா குல நற்பணி மன்றத்தின் வெளியீடான டைரக்டரியில் பதிவாக தமிழகம் முழுவதும் உள்ள விஸ்வகர்மா மன்றங்களின் நிர்வாகிகள் முழு விவரங்களைத் தபாலில் அனுப்பலாம். பதிவுகள் இலவசம்.

- கே.வி. வெங்கடேஸ்வரன்,
விஸ்வகர்மா குல நற்பணி மன்றம்,
14/55, தட்டார் தெரு, இந்து பஜார்,
கீழக்கரை - 623 517.

●● கீழ்க்கண்ட நூல்கள் தேவை. 1. ராமசாமி சிவன் எழுதிய, "மகாவைத்தியநாத விஜயசங்கிரகம்"; 2. அதற்கு மறுப்புரையாக பட்டணம் சுப்பிரமணிய அய்யர் எழுதிய "கண்டனம்"; 3. அதற்கும் ஒரு மறுப்புரையாக, மாயவரம் வீணை வைத்தியநாத அய்யர் எழுதிய "மண்டனம்".

- கே.பி. ராமகிருஷ்ணன்.
சுராஜ் அண்ட் கம்பெனி காம்பவுண்டு,
வாரியம் சாலை (கிழக்கு),
பள்ளிமுக்கு, எர்ணாகுளம் - 682 016.

●● பிரதமரின் சுயவேலை வாய்ப்பு திட்டத்தின் கீழ் (PMRY) தொழில் தொடங்க, விரிவுபடுத்த ரூ. ஒரு லட்சம் வரை கடனுதவி பெற இலவச ஆலோசனை வழங்கப்படும்.

- வெ. ஜெயவேல்,
34, அ.க. தெரு,
மருதாபுரம்,
கோவை - 641 046.

●● வீரசாவர்கார் எழுதிய "சுதந்தர இந்தியாவின் ஆறு பொன்னேடுகள்" என்ற புத்தகம் வைத்திருப்பவர்கள், கடனாகவோ, விலைக்கோ தந்து உதவவும்.

- இ. சுபாகரன்,
36, ஆரியகௌடர் தெரு, மேற்கு மாம்பலம்,
சென்னை - 33.

●● ஆஸ்துமாவை கட்டுப்படுத்த பிராணாயாமம் சரியான முறையில் செய்ய, செய்முறை விளக்கம் எழுதினால் நல்லது. அல்லது இது குறித்து புத்தகம் இருந்தால் தகவல் தெரிவிக்கவும்.

- எல். நடராஜன்,
19, ராமச்சந்திரா சாலை,
நேரு நகர்,
சென்னை - 44.

(பாலம் பகுதி மூலம் இணையும் வாசகர்களின் வெற்றி தோல்விகளுக்குக் கல்கி காரியாலயம் பொறுப்பு ஏற்க இயலாது. - ஆர்)

●● ஆன்மீக, சமய, தமிழ் நூல்களை இலவசப் பரிமாற்றம் செய்து கொள்ளும் வாசகர் வட்டம் அமைப்பில் சேர விருப்பமுள்ளவர்கள் தொடர்பு கொள்ளவும்.

- வி.எஸ். வெங்கடசுப்பிரமணியன்,
136, சின்னம்மாள் தெரு விரிவாக்கம்,
சாயிபாபா காலனி, கே.கே. புதூர்,
கோவை - 38.

●● அன்னை சாரதா தேவியின் மீது அன்பும் ஈடுபாடும் உள்ளவர்கள் என்னுடன் தொடர்பு கொண்டு அனுபவங்களைப் பகிர்ந்து கொண்டால் மகிழ்ச்சி அடைவேன்.

- பெ. இராஜவேலன்,
3-96. இரவியடி தெரு.
ஆக்கூர், (அ) தரங்கம்பாடி (வ)
609 301.



''வேலைக்காரிதான் வைச்சிருக்கோமே! அப்புறம், நீ வேற எதுக்குப் பெருக்கறே?''

''நீங்க வேற... ஒரே குப்பையா இருக்குன்னு, 'தாம்தூம்முன்னு' குதிப்பா...''

– ஆர். வசந்தகுமார்



''எங்க வீட்டு வாஷிங் மெஷினுக்கு கரெண்டே தேவை இல்லைன்னு சொன்னதை நம்ப மாட்டேன்னியே... இத பாரு...''

– எஸ்எஸ். பூங்கதிர்



''என் பெண்ணுக்கு லவ் லெட்டர் அனுப்பினது நீதானே!''

''ஹி... ஹி... ரொம்ப சூடா இருக்கீங்களா?''

''ஆமா. கோபம்தான். அவ அம்மாவுக்கு லவ் லெட்டர் அனுப்பிச்சுட்டுத்தான் நான் இவ்வளவு நாளா அவஸ்தைப் படறேன். நீ வேற ஏன் மாட்டிக்கறே?''

– வெ. ராஜாராமன்

செய்து கொண்டிருக்கிறார் என்று பிற அதிகாரி களுக்கும் தெரியும்; உதவ முடியும். ரகசியம் என்று பொத்தி வைக்கக் கூடாது. ஏனென்றால் விஜி லன்ஸ் துறையில் எல்லாமே ரகசியம் தானே. வேறொன்றுமில்லை. கோட்டையில் உள்ள அலுவலக நடைமுறைகள் உமாசங்கருக்குத் தெரியவில்லை. அதனால் உமாசங்கர் ஆர்வக் கோளாறு காரணமாக, தனிப்பட்ட முறையில் உதாரணமாக – 'இணைக்கமிஷனர் விஜிலன்ஸ் '96' என்று கோப்பு எண் போட்டு லெட்டர் அனுப்பியுள்ளார். அதைத் தெளிவுபடுத்தும் விதமாகப் போடப்பட்ட சர்க்குலர்தான் அது!'' என்று அடித்துச் சொன்னார் அவர். கோப்புகள் உமாசங்கருக்கு அனுப்பக்கூடாது என்று யாரும் எந்த உத்தரவும் போடவில்லையாம்.

இதைப் பற்றி விஜிலன்ஸ் துறை கமிஷனர் எஸ்.ஏ. சுப்பிரமணியம் ஏதாவது சொல்கிறாரா என்று அவரை அணுகினோம். ''பத்திரிகைகளில் வந்த செய்தி பற்றி ஒன்றும் சொல்வதற்கில்லை. நாங்கள் ஆராய்ந்து கொடுத்து, விஜிலன்ஸ் போலீ ஸால் கோர்ட்டில் பதிவு செய்யப்பட்ட வழக்கு களைப் பற்றி ஏதேனும் சந்தேகம் இருந்தால் கேளுங்கள் சொல்கிறேன். மற்றபடி உமாசங்கர் ஒரு திறமையான அதிகாரி!'' என்றார் அவர்.

இந்த மேட்டரின் கதாநாயகனான உமா சங்கர் இது விஷயத்தில் எதுவும் பேச முடியா தென மறுத்துவிடவே, மற்றொரு இனம் ஐ.ஏ.எஸ். அதிகாரியைத் தொடர்பு கொண்டோம்.

''விஜிலன்ஸ் கமிஷனர், நேரடியாக தலைமைச் செயலாளர், மற்றும் முதல்வரிடம் ரிப்போர்ட் செய்யும் இடத்தில் உள்ளார். ஆக, எந்த விஷயத் தில் கேஸ் போடலாம் என்று முடிவாக எடுத்துச் சொல்லும் உரிமை மற்றும் பொறுப்பு அவருக்கே உள்ளது. எங்களைப் போன்ற அதிகாரிகளுக்கு சீனியர் அதிகாரிகளுடன் கருத்து வேறுபாடு வரு வது என்பது சகஜம். 'ஆராய்ந்து பார்க்கத் தகுதி யானது' என்று உமாசங்கர் கருதும் ஒரு விஷ யத்தை கமிஷனர் நிராகரிக்கலாம். அப்படிச் செய் யப்படும்போது ஜூனியர் அதிகாரிக்குக் கஷ்ட மாகத்தான் இருக்கும். 'சரி விட்டுத் தள்ளு' என்று சமாதானப் போக்கை வளர்த்துக் கொண்டால் எல்லாம் சரியாகி விடும்!'' என்றார் அவர்.

வழக்கப்படி உமாசங்கருக்கு கோப்புகள் செல் கின்றன என்றும் சொன்னார் அந்த அதிகாரி. ''உமாசங்கர் மனநிறைவுடன்தான் காரியங்களைச் செய்து வருகிறார். 'பல புது விஷயங்களைத் தெரிந்து கொள்ளும் வாய்ப்புக் கிடைத்திருக்கிறது' என்றும் அவர் நண்பர்களிடம் சொல்லிக் கொண் டிருக்கிறார்!'' என்றும் சொன்னார்.

- ப்ரியன்

# தூக்கம் வராமல் தவிக்கிறீர்களா?



ஆபீஸ்ல வேலை பார்த்துட்டே இருக்கீங்க. திடீர்னு ஒரு வெறுப்பு வந்து, விட்டுட்டு எங்கனா ஓடிட மாட்டமான்னு தோணுதா?

மாச நாவலோ, வேறெதுவோ படிச்சிட்டிருக்கீங்க. காரணமே இல்லாம, கிழிச்சிப் போட்டுட்டு, யார் மேலயாவது எரிஞ்சி விழணும் போலத் தோணுதா?

ரேஷன் கடை, எம்ப்ளாயிண்ட்மெண்ட் எக்ஸ்சேஞ்ச், சென்ட்ரல் ஸ்டேஷன் இப்படி எங்கயாவது க்யூவுல நிக்கறப்ப, எதையாவது நினைச்சி, 'ஓ'ன்னு அழலாம் போல இருக்கா?

இப்படியெல்லாம் இருக்குன்னு யார்கிட்டேயாச்சும் சொன்னீங்கன்னா, 'வாழ்க்கைல ஒரு பிடிப்போட இருக்கணும் சார்; மனசை ஃப்ரெஷ்ஷா வெச்சிக்கங்க, ஜாலியா இருங்க' அப்படி இப்படீன்னு மைக் பிடிக்காத குறையா போதனை பண்ண ஆரம்பிச்சிடுவாங்க.

இந்த அலுப்பு, சலிப்பு இருக்கே, இதெல்லாம் வெறும் மனக் கவலைகளால மட்டும் வர்றதில்லை. (ஆராய்ச்சிப்படி 40–50 சதவீதம்தான் கவலைகளால வர்றது.)

அப்படின்னா வேற எதனால அலுப்பு வருது?

சரியான தூக்கம் இல்லாததால!

'நைட்டு சுமார் ஒம்பது, ஒம்பதரைக்குப் படுக்கறோம். காலைல அஞ்சரை, ஆறுக்கு எழுந்துக்கறோம். சில சமயங்கள்ல தூக்கம் வராமப் போகுது. ஆனா பெரும்பாலும் தூங்கிடறோமே'ன்னு கேப்பீங்க.

ஃபுல் நைட்டு தூங்கிட்டதா தோணறது ஒரு மாயத் தோற்றம்தான்! விளக்கமா சொல்றேன்.

தூக்கம்ங்கறது, தற்காலிகமா பிரச்னைகள், வேலைகள், கவலைகள், பொறுப்புகள் – இதுலேருந்து கிடைக்கற விடுதலை.

நாம தூங்கறப்ப, நம் மூளையும் முழுக்கத் தூங்கறதில்லை. காலி பெருங்காய டப்பால வாசனை மிச்சம் இருக்கறாப்பல, தூங்கறதுக்கு முன்னாடி நாம நினைச்சிட்டிருந்த விஷயங்களைக் கொஞ்சம் அசை போட்டுட்டே இருக்கும்.

சங்கிலித் தொடர் மாதிரி அந்த சிந்தனை பெரிசாயிட்டே போய் வேற பல விஷயங்களையும் அசைபோடும். இந்த செயலோட விளைவு



''நான் சி.பி.ஐ. அதிகாரி. பணம் பதுக்கி வச்சு இருக்கிற இடத்தைக் காட்டுங்க.''

''ஐயோ! இப்பத்தானே ஒருத்தன் நான் சி.பி.ஐ.அதிகாரின்னு இருக்கிற பணத்தை எல்லாம் அள்ளிக்கிட்டுப் போனான்!''

– நெற்குப்பை கி. மனோகரன்

---

தான் கனவு. செவன்ட்டி எம்.எம்.ல பிரச்னை யெல்லாம் பூதாகாரமா, கண்ணு முன்னாடி ஷோ காட்டும்.

ஆழ்ந்த உறக்கத்துல கனவு வர்றது உண்டு தான். ஆனா கனவு வரும்போதெல்லாம் ஆழ்ந்த உறக்கத்துல இருக்கறதா அர்த்தமில்லை.

நிம்மதியான உறக்கம் போல சிறந்த மருந்து வேற இல்லை. பெரும்பாலான மனநோயாளி கள் அப்படி ஆனதுக்கு, சரியான தூக்கமில் லாமையும் ஒரு காரணம்னு பிரிட்டன்ல ஒரு ஆராய்ச்சியாளர் சொல்லியிருக்கார்.

ரத்த ஓட்டம், நரம்பு மண்டலங்கள், திசுக் கள், செல்கள், எல்லாமே நிம்மதியான உறக்கத் தினாலே ரீ-சார்ஜ் ஆறது தெரியுமா?

**ச**ரி. எப்படி நிம்மதியா தூங்கறது?

முதல்ல தூங்கற நேரத்தை ஒழுங்குபடுத் திக்கணும். ஆறு மணி நேரத்துக்கு மேல தூங் கறது தப்பு. மிஞ்சிப் போனா ஏழு மணி.

லோ பத்துலேருந்து அஞ்சு. அல்லது ஒம்பது லேருந்து நாலு. இந்த மாதிரி ஒரு வரையறை வெச்சிக்கணும்.

தூங்கப் போறதுக்கு ஒன் அவர் முன்னாடி வேலைகளை முடிச்சுட்டு, நைட்டு, காத்தாட சும்மா ஒரு அரை மணி உலாவிட்டு வர்றது நல்லது. (அந்த அரைமணியில ஆபீஸ் கவலை, வீட்டுக் கவலைப்பட்டா, தூக்கம் போச்!)

பிரச்னைகளை மறந்துட்டு, ஜாலியா சந்தோஷமான விஷயங்களைப் பத்தி அப்ப யோசிக்கப் பாருங்க. உங்களுக்குப் பிடிச்ச மனிதர்கள், நண்பர்களைப் பத்தி நினைச்சுக்க லாம்... அல்லது இனிமையான கற்பனை களைப் பண்ணிப் பார்க்கலாம்...

வாக்கிங் – உலாவல் எல்லாம் தொடர்ந்து சாத்தியமில்லைன்னு நினைக்கறவங்க, நண்பர்களோட நின்னபடிக்கு ஒரு குட்டி அரட்டை அடிச்சிட்டு வரலாம். இதெல்லாம் மனசை லேசாக்கறதுக்குத்தான் அப்பமுங் கறதை ஞாபகம் வெச்சுக்கணும்.

அப்புறம்... எப்பவும் குப்புறப்படுக்காதீங்க. குப்புறப்படுக்கறவங்களுக்குத்தான் பயங்கர கனவெல்லாம் நிறைய வரும்!

**வ**யசானவங்களுக்குத் தூக்கம் வராதது ஒரு பிராப்ளம்தான். அதுக்கு மருந்து இடை யாது.

ரிடையர் ஆனவங்க, பகல் முழுக்க வேலை எதும் பண்ணாம சும்மாவே இருந்துட்டு நைட்டு படுத்தா தூக்கம் வராம போறது இயற்கை.

சின்னச் சின்னதா ஏதாவது வேலை செஞ் சிட்டே இருக்கணும். நல்ல ஓய்வு வேணும்னா கூட உழைக்கணும், பார்த்துக்கங்க! முக்கிய மான விஷயம் – இந்த தூக்க மாத்திரைகள் பக்கம் ஒதுங்கவே ஒதுங்காதீங்க! அடிக்ட் ஆயிட்டா பிறகு அது இல்லாம தூங்க முடி யாது.

என்ன டிரை பண்ணியும் தூக்கம் வர லைன்னா – இதை டிரை பண்ணிப் பாருங்க. இது எந்த வகை மருத்துவம்னு எனக்குத் தெரியலை. ஆனா, எங்க பாட்டி சொல்லி, அனுபவபூர்வமா ஒர்க் அவுட் ஆகியிருக்கு :

ஒரு தம்ளர் கொதிக்கிற வெந்நீர்ல ஒரே ஒரு ஏலக்காயைப் பொடி பண்ணிப் போட்டு, மூச்சு விடாமக் குடிச்சிட்டுப் படுங்க.

பதினைந்தே நிமிஷத்துல தூங்கிடுவீங்க.

- சுபி

---

''என்னது! அந்தப் பத்திரிகை ஆசிரியருக்கும் உங்க தலைவருக்கும் சண்டை வந்துடுச்சா...?''

''ஆமா... எங்க தலைவரை 'தலை மறைவாவது எப்படி'ன்னு தொடர் எழுதச் சொன்னாராம்!''

– அவ்வை கே. சஞ்சீவிபாரதி



# காவிரிக் கரையில் கால் ஏக்கர் நிலம், முதலீட்டாளர்களுக்கு காய்கறி இலவசம்



| | | |
|---|---|---|
| தொடர்ந்து | 7 | ஆண்டுகளுக்கு |
| ஒவ்வொரு | 7 | நாட்களுக்கு ஒருமுறை |
| உங்களுக்கு | 7 | கிலோ காய்கறி தர |

## வருகிறான்

# காய்கறிகாரன்

- விலைவாசி ஏற்றத்தின் பாதிப்பின்றி நீங்கள் விரும்பும் 7 கிலோ காய்கறிகள் உங்கள் இல்லம் தேடி இலவசமாக வருகிறது, அல்லது வருமானவரி விலக்குப்பெற்ற விவசாய வருமானமாக ஆண்டுக்கு ரூ.3000/- முன் தேதியிட்ட காசோலையாக வழங்கப்படும்.
- கால் ஏக்கர் நிலத்தை 7 வருடங்களுக்குப்பிறகு வீட்டுமனைகளாக நல்ல விலைக்கு விற்கலாம்.

## முதலீட்டுத் திட்ட விவரம்

| திட்டம் 'A' | திட்டம் 'B' * | திட்டம் 'C' * |
|---|---|---|
| கலப தவணைத்திட்டம் | குறுகிய தவணைத்திட்டம் | ஒரே தவணைத்திட்டம் |
| முன்பணம் ரூ. 3,500 | முன்பணம் ரூ. 11,800 | ஒரே தவணை |
| மாதத்தவணை ரூ. 2,675 | மாதத்தவணை ரூ. 11,000 | ரூ. 32,900 |
| மாதங்கள் 12 | மாதங்கள் 2 | |

* B மற்றும் C திட்டதில் சேருபவர்களுக்கு உடனடியாக காய்கறி வழங்கப்படும்.
பதிவுக் கட்டணமாக ரூ. 2,500/- கூடுதலாக செலுத்த வேண்டும்.

இதுவரை 2000 குடும்பங்கள் பயனடைந்து வருகிறது. நீங்களும் சேர்ந்து பயனடையுங்கள்.




## B K எஸ்டேட்ஸ்

48, வடக்கு உஸ்மான் சாலை, இரண்டாவது தளம்,
தி. நகர், சென்னை - 600 017.
தொ. பேசி. 8228282/8266978/8277234 பேக்ஸ் : 91-044-828 2792

கிளை : No. A3, SVV காம்ப்ளக்ஸ், 9, சாஸ்திரி சாலை, திருச்சி - 620 017. போன் : 33613



**புதிய அலுவலக திறப்பு விழா சிறப்பு பரிசு !**

முதலீட்டாளர் மற்றும் அறிமுகப்படுத்துவோருக்கும் சிறப்பு பரிசு உண்டு!

JEGI/BKE/41/96

# இந்திர தனுசு

## 39. அசுரத் தாக்குதல்!

காகதிய இளவரசி ருத்ராம் பாளைக் குறிவைத்து கனவேகத்தில் பறந்தது அந்தக் குறுவாள். அடுத்து கனத்த வாளொன்றும் அவன் தலைமீது வேகத்துடன் இறங்க முற்பட்டது. போதாக்குறைக்கு சற்றுத் தொலைவிலிருந்த போர் வில்லிலிருந்து புறப் பட்ட அம்பொன்றும் அவன் கழுத்தைக்



குறிவைத்துப் பறந்தது.

ருத்ராம்பாளின் இடதுகரத்திலிருந்த கேடயம் உயர்ந்து குறுவாளையும், கழுத்தை நோக்கிப் பறந்து வந்த அம்பையும் லாகவமாகத் தடுத்தது. அவள் வலது கரத்திலிருந்த வாள் உயர்ந்து, தலைக்கு மேல் இறங்கிய வாளைத் தடுத்து, தீப்பொறி பறக்கப் பின் வாங்கி, மீண்டும் சுழன்றது. தொடர்ந்து அவளை நோக்கிப் பறந்த அம்புகளும், தாக்க முயற்சி செய்த வாளும் அவளது வேகத்திற்கு முன் பயனற்று அந்தப் பயிற்சிக் கூடத்தில் பெரும் ஒலிகளை எழுப்பி எதிரொலித்தன. சற்று நேரத்தில் அவள் வாளுடன் மோதிய வாள் ஒரு மூலையை நோக்கிப் பறந்து, கீழே சிதறிக் கிடந்த ஆயுதங்களின் மீது மோதி, பெரும் ஒலியை எழுப்பியபடி விழுந்தது.

தலைக் கவசத்தைக் கழற்றி, வழிந்த வியர்வையைத் துடைத்துக் கொண்ட இளவரசியின் விழிகள், எதிரில் நின்ற உபதலைவனையும் வீரர்களையும் உஷ்ணத்துடன் பார்த்தன. "இதைவிட வேகமாகத் தாக்க உங்களால் முடியாதா?" என்ற கேள்வியும் அதே உஷ்ணத்துடன் வெளிப்பட்டது அவளிடமிருந்து.

அச்சத்தில் இன்னும் வியர்த்து வழிந்தபடி திருதிருவென விழித்த உபதலைவனின் முகத்தை நோக்கி இடதுகரத்திலிருந்த கேடயத்தை விட்டெறிந்தாள். வாளை ஒரு சுழற்றலில் திருப்பி உறையிலிட்டபடியே பயிற்சிக் கூடத்தை விட்டு வெளியே நடந்தாள். கிழக்கிலிருந்து வீசிய குளிர்ந்த காற்று அவள் உஷ்ணத்தைத் தணிக்க முயன்று தோற்றது. ஆதித்யன் சிறைப்பட்டபோது, மன்னன் அனுமதித்தால் தனக்குப் போர்க்கலையில் பயிற்சியளிப்பதாக அவன் கூறிய வார்த்தைகள் அவள் செவியில் மீண்டும் ஒலிக்கவே, அதே வேகத்தில் சிறைக்கூடத்தை நோக்கி விறுவிறுவென்று நடந்தாள் அவள்.

இளவரசியின் வருகையைக் காவலர் அறிவித்தபின்பும் சிறைக்கூடத்தின் சாளரத்தின் வழியே தெரிந்த நீலவானத்தையும், மேகக் கூட்டங்களையும் ரசித்தபடி ஏதோ சிந்தனையில் ஆழ்ந்து கிடந்தான் ஆதித்யன். சற்று கழித்தே அவளைத் திரும்பி நோக்கியவனின் விழிகளில் விஷமம் படர்ந்தது. கவசங்களுடனும், விழிகளில் தெறித்த உஷ்ணத்துடனும் அவள் நின்ற கோலத்தைக் கண்டவனின் இதழ்களில், முறுவல் ஒன்றும் நெளிந்தது.

"இளவரசியார் ஏதோ போருக்கு ஆயத்தமாக வந்திருப்பதாகத் தெரிகிறது" என்றான் அந்த விஷமம் குரலிலும் ஒலிக்க.

"ஆம்!" என்ற இளவரசி தொடர்ந்து, "நீ இங்கு வந்த அன்று எனக்குப் போர்ப்பயிற்சி அளிப்பதாகக் கூறினாயல்லவா?" என்றாள்.

ஆதித்யன் நகைத்தான்.

"ஏன் நகைக்கிறாய்?"

"அந்த உத்தேசத்தை நான் மாற்றிக் கொண்

## விஷ்வக்சேனன்

டேன்" என்றான் நகைப்பினூடே.

"ஏன்? அச்சமாக இருக்கிறதா? அல்லது நான் பெண் என்பதால் குறைவாக மதிப்பிடுகிறாயா?" – இளவரசியின் கேள்வியில் வேகமிருந்தது.

ஆதித்யன் விழிகளில் ஒருகணம் கூர்மை பளிச்சிட்டது. செதுக்கப்பட்ட கருங்கல் இருக்கையில் நிதானமாக அமர்ந்து அவளை ஏறிட்டவன், "பாண்டிய வம்சம் அச்சமென்பதை அறவே அறியாதது இளவரசி. தவிர...."

"தவிர...?"

"தவிர, உங்களைப் பெண் என்று யார் கூறியது?" என்ற ஆதித்யன் பலமாக நகைத்தான்.

"ஆதித்ய பாண்டியா...!" ருத்ராம்பாளின் குரல் ரௌத்ராகாரமாக உயர்ந்து ஒலிக்க, ஒருகால் தரையில் ஓங்கி அறைந்தது. அவள் கரமும் வாளின் பிடி மீது அமர்ந்து அதைப் பாதிவரை



உருவவும் செய்தது.

"அப்படி யாரும் நிரூபித்தால் முதலில் அவர்களுடன் போரிடத் தயாராக இருக்கிறேன் இளவரசி" என்றான் ஆதித்யன் நகைப்பினூடே.

ருத்ராம்பாளின் விழிகள் சிவந்து, வெளியே உருவப்பட்டுவிட்ட வாளுடன் சேர்ந்து மின்னின.

அவளைக் கையமர்த்திய ஆதித்யன், "இன்னும் இரு தினங்களுக்கு உங்கள் வேகத்தைப் பொறுத்துக் கொள்ளுங்கள் இளவரசி" என்றான் முறுவலுடன்.

"இரு தினங்களா? எதற்கு?" – உஷ்ணத்துடன் வந்தது இளவரசியின் கேள்வி.

"உங்களுக்குப் பயிற்சியளிக்க ஒருவர் வந்து கொண்டிருக்கிறார். பெண்களுக்கு வாட் பயிற்சியளிப்பதில் தமிழகத்தில் அவருக்கு இணையானவர் கிடையாது" என்றான் ஆதித்யன் அதே முறுவலுடன்.

"யார் அவர்?"

"வீரபாண்டியர். என் தமையன். பெண்களுக்குப் பயிற்சியளிப்பதில் வல்லவர்."

ருத்ராம்பாளின் குரலில் ஆத்திரம் வெடித்தது. "வீரபாண்டியன் வரும்வரை நீ இங்கிருக்கப் போவதில்லை ஆதித்ய பாண்டியா!" என்றவள் தொடர்ந்து இரைந்தாள். "நாளையே உன்னைத் தலைநகர் உறங்கைக்கு இழுத்துச் செல்கிறேன். அங்கு உனக்கு அளிக்கும் தண்டனையை வாழ்நாள் முழுவதும் மறக்க இயலாதபடி செய்து விடுகிறேன் பார்! பெட்டிப் பாம்பாக உன்னை அடக்காவிட்டால் நான் ருத்ராம்பாளில்லை..." என்றவள் திரும்பி நடந்தாள் வேகமாக. அவள் எடுத்து வைத்த ஒவ்வொரு அடியிலும் ஆத்திரம் பிரதிபலித்தது.

ஆதித்யனின் நகைப்பொலி சிறைச் சாலையை விட்டு வெளியேறிய பின்பும் அவளைத் தொடர்ந்து வந்தது. கோட்டைத் தலைவனை அழைத்து பாதுகாவலுக்கான அனைத்து ஏற்பாடுகளையும் உடனே செய்யும்படி உத்தரவிட்டவள், ஆதித்யனை அழைத்துச் செல்ல ரதத்தையும் வீரர்களையும் தயாராகும்படி ஆணையிட்டாள். காஞ்சியிலிருக்கும் பாண்டியரது படைகள் அத்தனை எளிதில் நெல்லூர்புரத்திற்கு வருவதோ, இடையில் காளத்தியிலிருக்கும் தந்தையின் படைகளைக் கடப்பதோ சாத்தியமல்ல என்று தீர்மானித்தவள், மறுதினம் உதயத்திற்கு முன்பாகவே ஆதித்யனை அழைத்துச் சென்று விடவும் தீர்மானித்தாள்.

**உ**தய நேரத்தில் அரண்மனையிலிருந்து முன்னும் பின்னும் இருபது புரவி வீரர்கள் தொடரப் புறப்பட்ட அந்த ரதத்தினுள்,

''நீங்கள் முதன்முதலில் தயாரித்த படம் எது?''

''ஒருகை பார்க்கிறேன்!''

''கடைசியாகத் தயாரித்த படம்?''

''இரு கை ஏந்துகிறேன்!''

– ஆ. பென்னியமின்

---

பிணைக்கப்பட்ட கரங்களுடன், அதே விஷமப் புன்முறுவலுடன் அமர்ந்திருந்தான் ஆதித்யன். அவன் எதிரில் வாளுடன் அமர்ந்து அவனைப் பார்த்தபடியே வந்த ருத்ராம்பாளுக்கு அவன் போக்கு பெரும் புதிராக இருந்தது. 'எதிரிகளின் நடுவில், பிணைக்கப்பட்ட கரங்களுடன் சித்ரவதைக் கூடத்திற்கு அழைத்துச் செல்லப்படுகிறோம் என்பதை அறிந்த பின்பும், ஒருவன் இத்தனை நிதானத்துடனும், முகத்தில் விரிந்த முறுவல் மாறாமலும் இருக்க இயலுமா' என்ற வியப்பு அவளை ஆட்கொண்டிருந்தது.

பெண்ணையாற்றையொட்டி துறை முகத்தை நோக்கி நீண்ட பாதையில் சென்ற ரதம், ஆற்றைக் கடந்து வடக்கு நோக்கித் திரும்பியது. கடற்கரையை ஒட்டியிருந்த பாதையில் கனகபுரியை நோக்கிச் சென்று கொண்டிருந்த வணிகர்களின் பொதிவண்டிகளைக் கடந்து, ரதம் அதிவேகமாகச் செல்லவும் தொடங்கியது.

பாண்டிய இளவலை சிறைப்படுத்தி அழைத்துச் செல்வதைக் கண்டதாலோ என்னவோ, நீலக்கடலில் அலைகளுக்கு கோபம் அதிகரித்திருக்க வேண்டும்! மணல்வெளியைத் தாண்டிய அலைகள் அந்தப் பாதையை நோக்கிக் கோப அலைகளாகச் சீறி எழுந்து தாழ்ந்து கொண்டிருந்தன. மணல்வெளியை அடுத்து, எழுந்து நின்ற பரதவர் இல்லங்களிலிருந்து வெளியே வந்து விழுந்த உணவுத் துண்டுகளுக்காகக் கடற்பறவைகளும் காகங்களும் பெரும் இரைச்சலுடன் போட்டியிட்டுக் கொண்டிருந்தன. பறவைகளை விரட்டி விளையாடிய சிறுவர்கள், இளவரசியின் ரதத்தையும் வீரர்களையும் ஏதோ அதிசயத்தைக் காண்பதுபோல் பார்த்தபடி நின்றார்கள். முன்னே சென்ற பொதி வண்டிகள் இளவரசியின் ரதத்தைக் கண்டதும் ஒதுங்கி, வழி விட்டன. சாலையோரத்துச் சத்திரங்களில் வணிகர்கள் உணவுக்காகக் காத்துக் கிடந்தனர்.

நகரப் பகுதியைத் தாண்டியதும் வேகம் அதிகரித்து விட்ட ரதம், ஐந்தாவது காதத்தில்



வேகம் குறைந்தது. வெளியே தலைநீட்டிய இளவரசியின் விழிகள் விரிந்தன. பொதி மூட்டைகள் பாதையெங்கும் சிதறிக் கிடக்கக் கவிழ்ந்து கிடந்தது ஒரு பொதிவண்டி! மூட்டைகளினிடையே சீனத்து வணிகர்களாகத் தோன்றிய நான்கைந்து பேர் விழுந்து வேதனையுடன் நெளிய, அவர்களின் உடைகள் குருதியில் நனைந்து கிடந்தன. அருகில் அடிமைகள் இருவர் கறுத்த உடலில் காயங்களுடன் குருதியைப் பரப்பியபடி விழுந்து கிடந்தனர். அடுத்து மூன்று பொதிவண்டிகளும் சரிந்து கிடந்தன. சற்றுத் தூரத்திலிருந்த சத்திரமொன்றிலிருந்து பெரும் கூச்சலும் எழுந்து கொண்டிருந்தது.

கீழே விழுந்து கிடந்த சீன வணிகரில் ஒருவன், புரண்டு ஏதோ முனகுவதைக் கவனித்து, அவனை எழுப்பி அமரவைக்க உத்தரவிட்டாள் காகதீய இளவரசி. வீரர்கள் அளித்த நீரை இரண்டு மடக்கு விழுங்கிய சீன வணிகன், விழிகளைத் திறந்து இளவரசி நிற்பதைக் கவனித்ததும் வணங்க முயன்றான். "கொள்ளை, கொள்ளை! அதோ.." என்ற சொற்களை மிகுந்த சிரமத்துடன் உதிர்த்தவனின் கரம் உயர்ந்து, தூரத்துச் சத்திரத்தைச் சுட்டிக்காட்டியது.

வணிகனின் வார்த்தைகள் செவிகளில் விழுந்ததும், ருத்ராம்பாள் திகைத்தே போனாள். காகதீயர் ஆட்சியில் வழிப்பறிக் கொள்ளையா? அதுவும் கனகபுரிக்குச் செல்லும் அயல்நாட்டு வணிகர் கொள்ளையடிக்கப்பட்டனர் என்றால், வணிகமும், நெல்லூர்புரத்தின் வருவாயும் எப்படியெல்லம் பாதிக்கப்படும் என்று எண்ணியவளின் ஆத்திரம் பொங்கியது. ஆதித்யனுக்குக் காவலாக வீரர் நால்வரை நிறுத்தியவள், மற்ற வீரர்களைப் பின்தொடர உத்தரவிட்டு சத்திரத்தை நோக்கி விடுவிடுவென்று நடந்தாள். சத்திரத்தை நெருங்க நெருங்க, வாட்கள் மோதும் ஒலிகளும், வணிகர்களின் கூச்சலும் உயர்ந்து ஒலிப்பதை உணர்ந்தவள், வாளை உருவியபடி சத்திரத்தின் வாயிலில் நுழைந்து நின்றாள். அவள் அதுவரை கேட்டும் பார்த்தும் அறியாத காட்சி விரிந்தது, அவள் கண்ணெதிரே. தலையில் சுற்றப்பட்டிருந்த முண்டாசுகள் முகத்தைச் சேர்த்து மறைத்திருக்க, கொள்ளையர்களாகத் தோன்றிய பதின்மர் அங்கு வணிகருடனும் அடிமைகளுடனும் போரிட்டுக் கொண்டிருந்தனர். உருவிய வாளை உயர்த்தி தன் வீரர்களை அந்தக் கொள்ளையரைத் தாக்க உத்தரவிட்ட காகதீய இளவரசி முன்னே பாய்ந்தாள்.

அடுத்து நிகழ்ந்தது விபரீதம்! அதுவரை கொள்ளையருடன் போராடிக் கொண்டிருந்த வணிகர்களும், அடிமைகளும், முகத்தைத் துணியால் மறைத்திருந்த அந்தக் கொள்ளையரும் சேர்ந்து இளவரசியையும், வீரர்களையும் தாக்கத் தொடங்கினர்! ருத்ராம்பாளின் திகைப்பு உச்சத்தை எட்டியது. எதிர்பாராத அந்தத் தாக்குதலால் வணிகர்களுக்கு இடையே ருத்ராம்பாளின் சில வீரர்கள் சென்று சிக்கி விட்டிருந்தனர். மேலும் தனது வீரர்கள் நால்வர் தரையில் உருண்டதைக் கண்ட ருத்ராம்பாள், இனியும் தாமதிப்பது பெரும் அனர்த்தத்தை ஏற்படுத்தும் என்பதை உணர்ந்தாள். அந்தக் கொள்ளை நிகழ்ச்சியே ஏதோ சதியென்பது புரிந்ததால் தனது வீரர்களைத் திரும்ப உத்தரவிட்டுத் தானும் வாயிலை நோக்கி நகர முயன்றாள்.

அவள் உத்தரவு என்னவோ துரிதமாகத்தான் வந்தது. ஆனால் அதை நிறைவேற்றுவதோ, அந்த சத்திரத்தை விட்டு வெளியேறுவதோ அவளுக்கும் காகதீய வீரர்களுக்கும் அத்தனை எளிதாக இல்லை. அந்தச் சிறு போரிலிருந்து மீண்டு சத்திரத்தின் வாயிலை இளவரசி அடையுமுன்பாக, இன்னும் சில வீரர்களும் காயங்களுடன் உருண்டு விழுந்ததைக் கண்டாள். வெகு ஆத்திரத்துடன் வாளை வீசியபடியே மெள்ள வெளியேறி, எஞ்சிய வீரர்களை ரதத்தை அடைய உத்தரவிட்டுத் தானும் கடற்கரைப் பாதையை நோக்கி விரைந்தாள்.

அங்கும் அவளுக்காகக் காத்திருந்தது பேரதிர்ச்சி! பிணைக்கப்பட்டிருந்த கரங்கள் விடுவிக்கப்பட்டு, முன்புறம் கரங்களைக் கட்டியபடி வெகு சகஜமான பாவத்துடன் ரதத்தின் படிகளில் அமர்ந்து இளவரசி வாளுடன் விரைந்து வருவதைப் பார்த்துக் கொண்டிருந்தான் ஆதித்யன். பொதிமூட்டைகளுக்கிடையே உருண்டு கிடந்த சீன வணிகர்களின் இடத்தில், தான் காவலுக்கு நிறுத்திய காகதீய வீரர்கள், காயங்களுடனும், கரங்கள் கட்டப்பட்டும் உருண்டு கிடப்பதையும், சீன வணிகர்கள் உருவிய வாட்களுடன் எழுந்து நிற்பதையும் கண்டவள் திகைத்தாள். அதையும்விட ஆதித்யனின் அருகில் நின்றிருந்த சீனனையும்

அவன் கரத்திலிருந்த சீனத்து வில்லையும் கண்டவனுக்கு, திகைப்பில் மூச்சே நின்றுவிடும் போலிருந்தது.

சிங்கவேள் குன்றத்தில், யாதவ இளவலை அவளிடமிருந்து மீட்ட ஐந்துகணைகளுடன் கூடிய அதே சீனத்து விசித்திர வில் அது! உற்றுக் கவனித்தவனுக்கு அன்று சீனத்து முதிய வணிகனாக வந்தவன்தான் இப்போதும் சாதாரண சீனத்து வணிகனாக எதிரில் நிற்கிறான் என்பது புரிந்தது. ரதத்தின் புரவிகளைப் பிடித்தபடி நின்றவன், சோழ தூதனாக ஆதித்யன் வந்தபோது உடன் வந்தவன் என்பதும் புரிந்தது அவனுக்கு. திகைப்பு என்ற சொல்லுக்குப் பொருளை முழுவேகத்தில் அனுபவித்த இளவரசியும் அவள் வீரர்களும் அடித்துவைத்த சிலைகளாக அப்படியே நின்றிருந்தனர்.

உயர்த்திய அந்த விசித்திர வில்லுடன் நெருங்கிய சீனன், "மன்னிக்க வேண்டும் இளவரசி. மறுபடி உங்களிடமிருந்து ஒரு இளவலை மீட்க நேரிட்டிருக்கிறது. முன்பு உங்களிடமிருந்து மீட்ட யாதவ இளவலிடமிருந்து உங்களுக்காக ஓர் ஓலையும் இருக்கிறது" என்றவன், கச்சையிலிருந்து ஓலைக் குழலொன்றை எடுத்து அவளை நோக்கி எறிந்தான். அடுத்து அந்த சீனன் செய்த சமிக்ஞையால் பின்புறத்தில் வந்து கொண்டிருந்த கொள்ளையரும் வீரர்களும், வணிகர் வேடமிட்டவர்களும், காகதீய வீரர்களின் புரவிகளை நெருங்கித் தாவியேறினார்கள். சத்திரத்தின் பின்னாலிருந்தும் பல புரவிகள் வெளிப்பட்டன. சீனனும் புரவியொன்றில் தாவியேறிக் கொள்ள, ஆதித்யனைச் சுமந்த ரதமும் புரவிகளும் இரண்டொரு கணங்களில் அங்கிருந்து துறைமுகத்தை நோக்கிச் சென்ற பாதையில் விரைந்து மறைந்தன. ரதமும் புரவிகளும் விரைவதைப் பார்த்தபடி நின்ற இளவரசிக்கு, நடந்தவை அனைத்தும் கனவோ என்ற பிரமை கூட ஏற்பட்டது.

நெடுநேரம் பிரமை தட்டிய விழிகளுடன் நின்ற இளவரசி, மெள்ளப் பார்வையைத் திருப்ப பிரயத்தனப்பட வேண்டியிருந்தது. கரத்திலிருந்த ஓலையைப் பிரித்தவள், அது யாதவ கிருஷ்ணனின் முத்திரையுடனும் கையொப்பத்துடனுமிருப்பதையும், அன்றே அவனது படைகள் தலைநகர் உறங்கையை நோக்கி நெருங்கிக் கொண்டிருப்பதை அறிவித்ததையும் கண்டாள். தெற்கில் பாண்டியர் தாக்குதலைத் தொடங்கியிருப்பதற்கும் யாதவரின் தாக்குதலுக்கும் தொடர்பிருப்பதும் புரிந்தது அவளுக்கு. பொதிவண்டிகளைத் தவிர தான் விரைந்து செல்ல மருந்துக்குக் கூட ஒரு புரவி அங்கில்லாததையும், தான் துரிதமாகச் செல்லாவிட்டால் யாதவ இளவலின் பணி எளிதாகவே முடிந்துவிடும் என்பதையும் உணர்ந்தவள் விட்ட பெருமூச்சு, உண்மையில் அனல் மூச்சாகவே வெளிவந்தது. துறைமுகத்தை நோக்கிச் சென்ற வணிகர்களிடம் கோட்டைத் தலைவனுக்குச் செய்தினுப்பி விட்டுக் காத்திருந்தாள் இளவரசி.

வேறுவழியின்றி அரைஜாம நேரத்திற்கு சத்திரத்தின் முகப்பில் காத்துக் கிடந்த காகதீய இளவரசிக்கு இன்னும் அதிர்ச்சியளிக்கக்கூடிய செய்தியுடன் நெல்லூர்புரத்திலிருந்து காகதீய வீரர்கள் புரவிகளில் விரைந்து வந்து கொண்டிருந்தார்கள். நெல்லூர்புரத்துக் கோட்டைத் தலைவன் அனுப்பியிருந்த அந்த வீரர்களின் முகங்களில் எல்லையற்ற கலவரம் விரவிக் கிடப்பதையும், அவளை நெருங்கி வணங்கிய வீரர் தலைவன் வார்த்தைகளின்றிக் கூறவந்ததைக் கூற இயலாது தவிப்பதையும் கண்டவள், இன்னும் விரும்பத்தகாதவைகள் ஏதோ நிகழ்ந்திருக்க வேண்டுமென்பதைப் புரிந்து கொண்டாள். வீரர் தலைவனின் தவிப்பை எரிச்சலுடன் நோக்கியவள், "வீரனே, கூறவந்ததை விரைவாகக் கூறு" என்றாள் உஷ்ணம் நிறைந்த குரலில்.

சொற்களை மென்று விழுங்கி, அவளை ஏறெடுத்து நோக்கவும் அஞ்சிய அந்த வீரனின் கரம் உயர்ந்து, துறைமுகமிருந்த திசையைச் சுட்டிக்காட்டியது. "இளவரசி, அதோ பாருங்கள்!" என்றான் வீரன் இணறியபடி.

துறைமுகமிருந்த பகுதியில் மெலிதாகத் தெரியத் தொடங்கிய கரும்புகை மெள்ள மெள்ள அதிகரித்து, கரிய பூதங்களைப் போல் உயர்ந்து மேகங்களைக் கறைப்படுத்தும் உத்தேசத்துடன் எழுந்து கொண்டிருந்தது.

"துறைமுகம் தாக்கப்படுகிறது இளவரசி! பாண்டியர் போர்க்கலங்கள் நமது கலங்களை அழித்து தீயிட்டுக் கொண்டிருக்கின்றன. உடன் யாதவ இளவலின் கலங்களும் வீரர்களும் துறைமுகத்தை ஆக்கிரமித்து விட்டார்கள். பாண்டிய வீரர்கள் இளையபாண்டியர் ஜடாவர்ம வீரபாண்டியர் தலைமையில் நமது கோட்டையை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறார்கள்" என்று இணறியபடியே முடித்த வீரனை ஒதுக்கிய ருத்ராம்பாள், முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடிக்க, புரவியொன்றில் தாவியேறி துறைமுகத்துப் பாதையில் புழுதி பறக்க அதனைப் பறக்க விட்டாள்.

அதே சமயத்தில் நெல்லூர்புரத்துக் கோட்டை வீரபாண்டியனின் அசுரத் தாக்குதலில் விழுந்து கொண்டிருக்க, கிழக்கு வாயிலைப் பெயர்த்துவிட்ட வீரபாண்டியன், உயர்த்திய வாளுடன் கோட்டைக்குள் பிரவேசித்துக் கொண்டிருந்தான்.

(தொடரும்)

***காஷ்மீரின் முன்னாள் முதல்வர் ஃபரூக் அப்துல்லாவின் வாழ்க்கை வரலாறு, "Farooq Abdullah — Kashmir's Prodigal Son" என்ற புத்தகமாய் வெளியாகியுள்ளது. (UBS பப்ளிஷர்ஸ், விலை ரூ. 250/-) அதிலிருந்து சில பகுதிகள் :***

# காதல், மோதல், கல்யாணம்!

சிறுவன் ஃபரூக்கிற்கு, பள்ளிக் கூடம் போவதைவிட, தால் ஏரிக்குப் போய், ஜாலியாய்ப் படகோட்டிக்கொண்டிருப்பது ரொம்பப் பிடிக்கும். ஆனால், ஃபரூக்கின் நட வடிக்கைகளைக் கண்கொத்திப் பாம்பாய் கவனிக்கிற வீட்டு வேலைக்காரரான அகமது கனியிடம் எப்போதாவது ஃபரூக் மாட்டிக் கொண்டு விடுவான்! அப்படியே குண்டுக் கட்டாய், ஃபரூக்கையும், அவன் நண்பர் களையும் பள்ளிக் கூடத்தில் கொண்டு தள்ளி விடுவார் கனி. பள்ளிக் கூடத்தில் படிக்கும் போது, அவனுக்குப் பிடித்த விஷயம், மலைப் பகுதிகளில் உறைந்து கிடக்கும் பனிக்கட்டி களை எடுத்துத் தின்பது! அப்புறம், தொண்டை கட்டிக் கொண்டு திணற, அப்பா ஷேக் அப்துல்லாவிடம் அடிவாங்க வேண்டி யது. இன்னொரு விஷயம் வீட்டுக்குத் தெரி யாமல் சிகரெட் பிடிப்பது. ஒரு நாள், மகன் சிகரெட் பிடிப்பதை, அப்பா பார்த்துவிட, அன்று வீட்டில் மண்டகப்படிதான்! பள்ளிக் கூடப் பையன் சிகரெட் பிடிக்கலாமா என்று மகனைக் கண்டித்த அப்பா ஷேக் அப்துல் லாவே புகைக் கூண்டு போல, எப்போதுமே புகைத்துக் கொண்டிருக்கிறவர்தான்!

ஃபரூக், மெட்ரிகுலேஷன் படிப்புக்காக ஸ்ரீநகரில் ஒரு கிறிஸ்தவ மிஷனரி பள்ளியில் சேர்க்கப்பட்டபோது, பள்ளி வாழ்க்கை அவ ருக்கு மிகவும் பிடித்திருந்தது. காரணம், அங்கே படிப்பை விட, விளையாட்டுகளுக்கும், நீச்சல், மலையேற்றம், படகோட்டுதல் போன்றவற்றுக் கும்தான் அதிக முக்கியத்துவம் தரப்பட்டது. ஒருவாரம், இரண்டு வாரம் என்று அவ்வப் போது, மலையேற்ற முகாம்கள் நடக்கும். ஃபரூக் உற்சாகத்துடன் பங்கேற்பான். அந்த முகாம்களில், எந்த பிரச்னையானாலும், சுய மாகவே சமாளிக்க வேண்டும். அடுத்தவர் உதவியை நாடக்கூடாது. அந்த மலையேற்றப் பயிற்சி முகாம்கள், ஃபரூக் பின்னாளில் பெரும் பொறுப்புகளைத் துணிச்சலுடன் ஏற் கும் திறமைக்கு வித்திட்டன எனலாம்.

ஃபரூக்கின் மிக நெருக்கமான பள்ளித் தோழன் கிருஷன் பாகியா ஒரு காஷ்மீர் பண் டிட்டின் மகன். இரண்டு பேரும் லீவு நாட் களில், தால் ஏரிக்குப் போய் இந்தக் கரையி லிருந்து புறப்பட்டு, யார் முதலில் அக்கரைக் குப் போகிறார்கள் என்று பந்தயம் கட்டி நீந்து வார்கள். பிற்காலத்தில் ஃபரூக் அரசியலுக்கு வர, கிருஷன், ராணுவத்தில் சேர்ந்து, காஷ் மீருக்கே 1990ல் தீவிரவாதத்தை ஒடுக்க அனுப் பப்பட்டார் என்பது குறிப்பிடத்தக்கது! பள்ளி நாள் தோழர்களில் நெருக்கமான இன்னொரு வர் ஷேக் ஜாவீத். இவர்களது நட்பின் ஆழம், பின்னாளில், ஷேக் ஜாவீத் இறந்த பிறகு, அவ ரது மனைவியையும், ஃபரூக்கையும் இணைத்து, அவரது அரசியல் எதிரிகள் திரித்துப் பேசும் அளவுக்குப் போனது. (ஃபரூக் இது பற்றி ரொம்ப அலட்டிக் கொள்ளவில்லை.)

பள்ளிப் படிப்பை முடித்துவிட்டு, பிர பலமான ஸ்ரீபிரதாப் கல்லூரியில் சேர விண் ணப்பித்துவிட்டு, ரிசல்ட்டுக்காகக் காத்திருந் தார் ஃபரூக். ரிசல்ட், அன்றைய தினம் காஷ்மீர் ரேடியோவில் மாலை 5 மணிக்கு அறி விக்கப்படுவதாய் இருந்தது. ஃபரூக்கும் அவரு டைய பெரியப்பா பையனும் டென்ஷனுடன் காத்திருந்தார்கள்.

மதியம் ஷேக் அப்துல்லா சாப்பாட்டுக்கு வீட்டுக்கு வந்தார். அவர் கையில் ஒரு சீல் இடப்பட்ட கவர். அதில் கல்லூரித் தேர்வுப் பட்டியல் இருந்தது. (பல்கலைக்கழக இணை வேந்தர் என்ற முறையில் ஷேக் அப்துல் லாவுக்கு அட்மிஷன் பட்டியல் ஒரு பிரதி தரப் பட்டிருந்தது.)

ஆவலுடன் மாணவர் ஃபரூக் அந்த கவரை எடுக்கப் போனபோது, பளீர் என்று ஒரு அடி கொடுத்தார் ஷேக் அப்துல்லா!

"கவர் மீது என்ன எழுதியிருக்கிறது?"

"மாலை 5 மணிக்கு முன் திறக்கக் கூடாது"

"அப்புறம் ஏன் இப்போது திறக்கிறாய்?"

தாம் முன்னதாகவே தெரிந்து கொண்டு விட்டதாய்ப் பெருமைபட்டுக் கொள்ளலாம் என்ற எண்ணம் நிறைவேறாமல் போனதில் ஃபரூக்கிற்கு ஏக வருத்தம்.

மணி ஐந்தாயிற்று.

"வா! கவரைப் பிரித்து ரிசல்ட் பார்க் கலாம்" என்று அப்பா அழைக்க, கோபம் தணி

யாத ஃபரூக், "நான் வரலை போ! ரேடியோவி லேயே கேட்டுக் கொள்ளுகிறேன்" என்று கூறி, அப்பாவுக்கு பதிலடி கொடுத்துவிட்ட சந்தோஷத்தில், ரேடியோவை நோக்கி எழுந்து சென்றான். அப்புறம் அடுத்த சில விநாடி களில், மகனைச் சமாதானம் செய்துவிட்டு, ரிசல்ட் கவரைப் பிரிக்க, ஃபரூக் தேர்வாகி யிருந்ததற்காகத் தன் பாராட்டுக்களைத் தெரி வித்தார், ஷேக் அப்துல்லா.

• ஃபரூக் அப்துல்லா



டாக்டர் படிப்பை முடித்தபின், இங்கிலாந்து சென்று, அங்கேயே பிராக்டிஸ் செய்து செட்டிலாக விரும்பிய ஃபரூக்கின் ஆசைக்கு, ஷேக் அப் துல்லா தடை போடவில்லை. நார்ஃபோக்கில் ஒரு ஆஸ்பத்திரியில் ஃபரூக் அப்துல்லாவுக்கு வேலை கிடைத்து. அதே மருத்துவமனையில் நர்ஸ் பயிற்சி பெற்றுக் கொண்டிருந்த பெண்களில், மோளி பிரிட்சரும் ஒருவர். நடுத்தரக் குடும்பத்துப் பெண். அவரைப் பார்த்தவுடன், ஃபரூக்கிற்கு ஓர் இனம் புரியாத உணர்வு. மோளி சிகரெட் பிடிக்காத, மது அருந்தாத ஒரு பிரிட்டிஷ் பெண் என்று அறிந்ததும், மோளி மீது ஃபரூக்கிற்குக் காதல் பிறந்தது. முதலில் மோளி, ஃபரூக்கைக் கண்டு கொள்ளவே இல்லை. மணந்தால், மோளி யைத்தான் மணப்பது என்று தீர்மானித்து விட்ட ஃபரூக், மெள்ள மோளியுடன் பழக ஆரம்பித்து, சீக்கிரமே நெருக்கமாகி விட்டார்.

குடும்பத்துடன் பிக்னிக் போன சமயம், தம் காதலைப் பற்றி தம் பெற்றோரிடம் சொன் னார் மோளி. அதைத் தொடர்ந்து ஃபரூக் மோளியின் பெற்றோரைச் சந்தித்துப் பேசி னார். அவர்கள் திருமணத்துக்குச் சம் மதிக்க வில்லை.

தலாக் சொல்லி, விவாகரத்து செய்ய மாட்டேன் என் றெல்லாம் வாக்குக் கொடுத்து சம்மதம் பெற வேண்டியிருந்தது.

மோளியின் வீட்டில் சம்மதம் பெற்று விட் டாலும், ஃபரூக் பக்கத்தி லும் ஒப்புதல் வேண்டுமே! அது அத்தனை சுலப மில்லை. காரணம், இங்கி லாந்து புறப்படுமுன்பே, உறவுக்காரப் பெண் ஒருத் தியை ஃபரூக்கிற்கு முடிவு செய்து, நிச்சயதார்த்தமும் முடிந்து விட்டது!

ஃபரூக், தம் அப்பாவுக்கு டெலிபோனில் விஷயத்தைச் சொன்னவுடன், கோபத்தின் உச்சிக்குப் போய்விட்டார் ஷேக் அப்துல்லா.

"நீயே உன் மாமாவுக்கும் போன் செய்து, நிச்சயித்தபடி அவர் பெண்ணை மணக்கப் போவ தில்லை என்று சொல்லிவிடு. நான் இதில் தலையிட மாட்டேன்" என் றார் கடுமையாக.

ஃபரூக்கிற்கோ அந்தக் குடும்பத் தாரிடம் பேச தைரியம் வரவில்லை. சில நாட்கள் கழித்து, விஷயம் கேள்விப்பட்டு, நிச்சயித்த பெண்ணின் அண்ணனே, ஃபரூக்கிற்கு போன் செய்து விசாரிக்க, இவர் ஏதோ சொல்லிச் சமாளிக்க, முடிவில் இரண்டு குடும்பத்தாரிடையே மனக்கசப்பு ஏற்பட்டது.

ஒரு வழியாய், இருதரப்பு ஒப்புதலும் கிடைக்க, ஃபரூக்கும் மோளியும் 1969 செப்டம்பர் பதினாலாம் தேதி இந்தியா வந்தனர். ஸ்ரீநகரில் நிக்கா நடந்தது!

தொகுப்பு : **எஸ். சந்திரமௌலி**

பதிவுத் தபாலில் எனக்கு வந்திருந்த அந்தக் கடிதத்தைப் பார்த்து சிறிது அதிசயப்பட்டேன். பின்பக்கம் திருப்பிப் பார்த்து முகவரி முழுமையாய் இல்லாதது கண்டு ஆச்சரியப் பட்டேன். உள்ளே பிரித்துப் பார்த்தபோது மதுரையிலிருந்து வந்த கடிதம் என்றறிந்தவுடன் சிறிது அவசரப்பட்டேன். கடிதத்தை அனுப்பியவர் பெயர் முஸ்தபா என்று தெரிந்தவுடன் திடுக்கிட்டேன். கடிதத்தை முழுவதுமாய் படித்து முடித்தபோது மூர்ச்சையாகிப் போனேன்.

"ஐயா" என்று ஆரம்பித்து, தான் பிரபு என்பவனுடைய நண்பனென்றும், அந்தப் பிரபு, ப்ரியா என்ற பெண்ணை உயிருக்குயிராய் காதலிப்பதாயும், அவர்கள் காதலை இருவர் வீட்டிலும் எதிர்ப்பதாயும், அதற்குக் காரணம் ஜாதி வித்தியாசம் மட்டுமே என்பதாயும், அந்த ப்ரியா என்ற பெண்ணைத் தான், நான் எனது தம்பிக்காகப் பெண் பார்க்கச் சென்றதாயும், ஒரு வாரத்தில் தகவல் சொல்கிறேன் என்று சொன்ன நான் தயவுபண்ணி எதிர்மறைத் தகவல் தர வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டு மூன்று பக்கக் கடிதத்தை முடித்திருந்தான் முஸ்தபா.



ப்ரியா கொள்ளை அழகு. பத்தொன்பது வயதே நிரம்பிய பதுமை. விஜய்பூரில் கேஸ் அத்தாரிட்டியில் வேலை பார்க்கும் என் தம்பிக்கு அவ்ளைப் பெண் பார்க்கச் சென்றிருந்தோம். பெண் வீட்டார் நன்றாகவே உபசரித்து

நளினமாய்ப் பழகினார்கள். என் மனைவிக்கு இருபது பவுன் போட்டதால் சின்னவனுக்கும் அதற்குக் குறையாமல் செய்வதோடு ஒரு வைரத்தோடும் போட வேண்டும் என்று என் அம்மா கேட்டதற்கு முனகாமல் ஒப்புக் கொண்டார்கள். கையில் ரொக்கமாக அதிகம் வேண்டாமென்றும் டிரெஸ்ஸுக்குப் பதினைந்து மட்டும் போதும் என்று நான் சொன்னபோது எச்சில் விழுங்கி விழிகள் வெளிப்பிதுங்க தலையசைத்தார்கள், ஒப்புதலாய். எல்லாம் சுமுகமாக முடிந்தபின் கல்யாணத் தேதியை விரைவில் வைக்கச் சொல்லிவிட்டு ப்ரியாவுடன் டூயட் பாடிக் கொண்டே விஜய்பூருக்குப் பறந்து சென்றான் என் தம்பி.

பெண் பார்க்கச் சென்ற தினத்தில் ப்ரியாவின் முகத்தில் அப்பியிருந்த சோகக்கீற்று லேசான சந்தேகத்தைத் தந்தாலும் அயலாரைக் காணும் புதுப் பெண்ணின் பயம் என்று சும்மாயிருந்து விட்டேன். ஆனாலும், பத்தொன்பதே வயது நிரம்பிய தங்களது ஒரே பெண்ணை மத்தியப்பிரதேசத்துக்கு அனுப்ப அவர்கள் எப்படி உடனே சம்மதித்தார்கள் என்று என் மாமா என்னைக் கிளறி விட, அதன் நிமித்தம் என் மதுரை நண்பர் சேதுவிடம் அவர்கள் குடும்பம் பற்றி விசாரிக்கச் சொல்லிக் கடிதம் எழுதிவிட்டு, வீட்டில் முடங்கிக் கிடந்தபோதுதான் மதுரை முஸ்தபாவிடமிருந்து இந்தக் கடிதம் வந்தது.

மூன்று பக்கக் கடிதத்தை முழுவதுமாய்ப் படித்து முடித்தபின் முகம் முச்சூடும் "குப்"பென்று வியர்த்தது. கழுத்துப் பட்டை முதல் கணுக்கால் வரை லேசாக ஜுர வாடை வீச ஆரம்பித்தது. மனது பாறாங்கல்லை ஏற்றி வைத்தாற்போல் கனத்தது. அதே சமயம் பஞ்சு மிட்டாய் போல் லேசாகவும் இருந்தது. மண்டைக்குள் அழுத்தம் அதிகரித்தாற்போலிருந்த அதே வேளையில் நெஞ்சுக்குழி வெற்றிடமாயும் ஆகிவிட்டிருந்தது.



படிக்கும் புத்தகங்கள் முதல் பார்க்கும் டீவி, சினிமா வரை எல்லாமே காதல் என்ற சொல்லையும் செயலையும் நியாயப்படுத்தியே பேசுகின்றன. ஆனால் தனக்கும் தன் சுற்றத்துக்கும் என்று வரும்போது அது ஏனோ அநியாயமாய்ப்படுகிறது. அந்த ப்ரியா அந்தப் பையனைக் காதலிப்பதை மனசு வெறுக்கிறது. அந்தக் குடும்பத்தின் மீதே அருவருப்பு கொள்ள வைக்கிறது. அந்தப் பெண் பிள்ளையின் தாய் தந்தையரை துஷ்டர்களாய் மனது நினைக்கிறது. "நல்லவேளை தப்பித்தேன்" என்று குதூகலம் கொள்ள வைக்கிறது.

பலவித எண்ணச் சூறாவளியினூடே ப்ரியாவின் அப்பாவுக்குக் கடிதம் எழுதினேன். என் தம்பிக்கு முன்பே பார்த்த வேறு ஒரு இடத்தை நிச்சயம் செய்து விட்டபடியால்... என்ற எனது கடித வாசகங்களைக் கண்ட சுந்தரராமன் துடிதுடித்திருப்பார். வெண்ணெய் திரண்டபோது தாழி உடைந்ததாய் பரிதவித்திருப்பார்.

சுந்தரராமன் துடித்திருப்பார்... தவித்திருப்பார்... என்று எதிர்பார்த்த நான், இரண்டு நாளில் ஓடி வந்து என் வீட்டுக் கதவைத் தட்டுவார் என்று எதிர்பார்க்கவில்லை. எதிர்பாராதவை நடப்பதுதானே வாழ்வின் சூட்சுமம்?

சிவந்து கிடந்த விழிகளுடனும், எண்ணெய்ப் பசை காய்ந்து போய் காதருகில் சிறிது நரைத்த கேசத்துடனும் என் வீட்டு காலிங்பெல்லை அழுத்தினார் சுந்தரராமன். என்ன வாயிருந்தாலும் வராண்டாவோடு பேசி அனுப்பிடு என்ற என் அம்மாவின் பேச்சை லேசாய் மறுதலித்து, அவரை ஹாலுக்கழைத்து சேரில் அமர்த்தினேன்.

அவரை விட இருபது வருடம் சின்னவனான என்னை ரொம்பவும் மரியாதை கொடுத்தே விளித்தார். நிஜமாலுமே வேறு இடம் நிச்சயிக்கப்பட்டு விட்டதா என்று அறிந்து போக வந்தாராம். உடனே பதில் சொல்லத் தயங்கி, இரண்டு முறை நான் எச்சிலை விழுங்கியவுடன் அவர் உண்மையை யூகித்து விட்டார்.

**நந்தன்**

சிறு குழந்தைகளின் விடலை வயது எண்ணங்களை தயவு செய்து புறக்கணிக்குமாறு வேண்டினார். தன் பெண்ணுக்கு வேண்டிய மட்டும் புத்தி சொல்லி திருத்தி வைத்திருப்பதாய் அழுதார். வேற்று

ஜாதியில் பெண்ணைக் கொடுத்தால் நாளை முதல் ஊருக்குள் தலைநிமிர்ந்து நடக்க முடியாதென்று உருகினார்.

எனது சராசரி மனது எதற்கும் மசிய வில்லை. வேறொரு ஜாதிப் பையன்... அவன் மீது இவர் பெண்ணுக்குக் காதல்... அவன் திருந்தி விட்டானாம்... அவனைப் போய் என் தம்பிக்கு... நினைக்கவே குமட்டிக் கொண்டு வந்தது.

அந்தப் பெண் வேறொரு ஆணை மனதால் வரித்த பின்பு எப்படி இன்னொரு ஆண் பிள்ளையை... என்ற காரணம் யாருக்கும் தோன்ற வில்லை. தான் தலைநிமிர்ந்து நடக்க வேண்டி, தன் பெண்ணைக் கட்டாயப்படுத்தி இன்னொருவனுக்கு மணமுடிக்க வேண்டுமென்கிற நிலையில் சுந்தரராமன்... வேறு பையனுடன் பழகிய பெண்ணைத் தரங்கெட்டவளாய் நினைக்கும் நான்...

ஊரிலிருந்து வந்திருந்த மனுஷனின் காதுபட, "என்னடா... காலங்காத்தால உருப்படியான வேலை ஏதும் பாக்காம... வெட்டிப் பேச்சு பேசிண்டு..." என்று என் அம்மா சத்த மாய்க் கத்த ஆரம்பிக்க, வந்த நோக்கம் தோற்றதாய், தொங்கிய தலையுடன் வெளியேறினார் சுந்தரராமன்.

இதன் பிறகு, என் தம்பிக்கு வரன் பார்ப்பதில் படுபிஸியாகிப் போனேன். பாபநாசத்துக்கும், தாம்பரத்துக்கும் கோயமுத்தூருக்குமாகப் பல்வேறு திசைகளில் பல மாத மாகப் பயணம் செய்து சொஜ்ஜியும் பஜ்ஜியும் ருசிகண்டோமே தவிர வரனொன்றும் சரியாய்த் தகையவில்லை.

இதற்கிடையில் என் மதுரை நண்பர் சேது – நான் ஏற்பாடு செய்திருந்த டிடெக்டிவ் – ஃபயர் சர்வீஸ் வேகத்தில் ஒரு கடிதம் எழுதி யிருந்தார்.

அந்த ப்ரியா என்ற பெண்ணைப் பற்றி அக்கம்பக்கத்தில் தவறாகப் பேசிக் கொள்கிறார்

**''அந்த தலைவர் மாதிரி எச்சரிக்கை உணர்வு உள்ள அரசியல்வாதியை நீங்க பார்த்திருக்கவே முடியாது.''**

**''எப்படிச் சொல்றீங்க?''**

**''தன்னை மூத்தாள் அமைச்சர்னு சொல்லிக் காமல், 'வெகுமூத்தாள்' அமைச்சர்னு சொல்லிக் கிறாரே!''**

*– சீர்காழி. வி. ரேவதி*



களாம். அவள் ஜீன்ஸ் பேன்ட்டும் பனியனும் போட்டுக்கொண்டு அலைவதை தானே நேரில் பார்த்ததாகவும், அதுவே அந்தப் பெண்ணின் ஊதாரித்தனத்துக்கு முதல் எடுத்துக்காட்டென் றும் எழுதியிருந்தார். அவள் பல பையன்களுடன் சகஜமாய்ப் பேசுவாளென்றும் அதுவே அவள் பெரிய பஜாரியென்பதை ஊர்ஜிதம் செய்யுமெனவும் எழுதியிருந்தார். அவள் காலையிலே ஷாட்ஸ் போட்டுக் கொண்டு ஸ்டேடியத்தில் ஜாகிங் செய்வதாயும் அதனால் அவள் குடும்பப்பாங்கானவள் அல்ல என்றும் எழுதியிருந்தார்.

இதெல்லாம் படிக்கப் படிக்க எனக்கு ஒரு மாதிரியாகவே இருந்தது. வீராவேசமாய் உள்ள புதுமைப்பெண்ணையெல்லாம் சினிமாவில் பார்த்தால் மட்டுமே ரசிக்க முடியுமென்று தோன்றுகிறது. எனக்கோ... என் தம்பிக்கோ... ஏன், என் குடும்பத்தார் யாருக்குமே இதெல் லாம் வேண்டாமென்று தோன்றுகிறது. காலை ஐந்து மணிக்கு எனக்கு முன்னால் எழுந்து.. எனக்கு பெட் காப்பி கொடுத்து... குளித்து முடித்து என்னை நமஸ்கரித்து... நான் சாப்பிட்ட எச்சில் இலையில் சாப்பிட்டு... என் துணிமணி தோய்த்து... நான் ஆபீஸ் செல்லும் போது எனக்கு ஷூ மாட்டிவிட்டு... என் அனுமதியின்றி படியிறங்காத... என் நண்பர்கள் வீட்டுக்கு வந்தால் சமையலறையை விட்டு வெளியே மூக்கு கூட நீட்டாத பத்தினிப் பெண்தான் எனக்கும், என் தம்பிக்கும், என் சுற்றம் அனைத்துக்குமே வேண்டுமென்று தோன்றுகிறது.

ஏற்கெனவே அந்தப் பெண்ணை நாங்கள் தலைமுழுகிய விஷயத்தை சேதுவுக்கு நாலு வரியில் எழுதி அனுப்பினேன்.

இதற்கிடையில் மதுரையில் மீனாக்ஷி சுந்தரேஸ்வரர் கோயில் கும்பாபிஷேகம் நடந்தது. கும்பாபிஷேகத்தைப் பார்ப்பதுவே பல கோடி புண்ணியம் என்று யாரோ சொல்ல, பல கோடி புண்ணியம் பெற மதுரைக்குப் பயணமானேன்.

எள்ளையெறிந்தால் அது மண்ணைத் தொடாத அளவுக்கு மதுரை பிதுங்கி வழிந்தது.

எல்லா ஜனங்களும் ஏதோ முணுமுணுத்துக் கொண்டு எதையோ எதிர்பார்த்து சிரத்தையா யிருந்தது ஆச்சரியம் தந்தது. அபிஷேகம் முடிந்து பனிரெண்டு நதிகளின் நீரும் தெளிக் கப்பட, அதைப் பெற வேண்டி, கூட்டம் எக்கி எக்கிப் பறந்தது.

நானும் சளைக்காமல் ஒரு சொட்டு ஜலத்தை முண்டியடித்து வாங்கி தலையில் புரோக்ஷித்துக் கொண்டு திரும்புகையில், தழைய்ப் புரண்ட வேஷ்டியுடன் கண்களில் நீர் மல்க கைகளிரண்டையும் மேலே தூக்கி அம்பா



''என்னய்யா நிர்வாகம் நடக்கின்றது? கட்அவுட் உண்டா? ஆடம்பர விழாக்கள் உண்டா...? மலர்ப் பாதை உண்டா? கார்களின் அணிவகுப்பு உண்டா? இதெல்லாம் வேண்டாம். அட அமைச்சர்களாவது முதலமைச்சர் காலில் விழுகின்றார்களா...? எனவே உள்ளாட்சித் தேர்தல்களிலாவது பொது மக்கள் சிந்தித்து வாக்களிக்குமாறு கேட்டுக் கொள்கிறேன்!''

– சுந்தர் அழகேசன்

னின் அருள்வேண்டி நின்றிருந்தார் சுந்தரராமன்.

அருகில் சென்று நலம் விசாரித்தேன். கண் விழித்த சுந்தரராமன் என்னைப் பார்த்தவுடன் 'பொலபொல'வென்று கண்ணீர் உகுத்தார். ஒரு பெரியவர் குழந்தையாய்க் குமுறியது வேதனையளித்தது. அதைவிட, அவர் சொன்ன செய்தி மனதைப் பிழிந்தது.

என்னைப் பார்த்துவிட்டு ஊர் திரும்பியவுடன் சுந்தரராமன் ப்ரியாவை பெல்ட்டு கொண்டு விளாசியிருக்கிறார். கண்டவன் காலில் விழ வைச்சுட்டியேடி பாவி என்று கத்தியபடி அவளைக் கதற வைத்திருக்கிறார். பத்தொன்பது வயதுக் குழந்தை பதிமூன்று நாட்கள் குப்புறப்படுத்த நிலையிலேயே இருந்ததாம். எங்களை ஊர்ல நிமிந்து நடமாட முடியாம பண்ணிப்பிட்டு அவங்கூட போகணும்கிறியே, அப்படி என்னடி அவங்கிட்ட இருக்கு என்று சுந்தரராமன் இரைந்ததற்கு ப்ரியா சொன்ன பதில் அவரை குரூர ஸ்வரூபியாக மாற்றியிருக்கிறது.

தனக்கும் தன் அப்பா – அம்மாவின் மீது அபரிமிதமான அன்பு உண்டென்று கூறியிருக்கிறாள். அது என்றும் மாறாது என்று கதறியிருக்கிறாள். ஆனால், தான் ப்ரபுவை மறந்து விடத் தகுந்த காரணம் கூறினால் உடனே விட்டு விடத் தயாரென்று பகர்ந்திருக்கிறாள். ஒரு பையனைப் பார்க்கும்போது, அவன் நல்லவனா... நல்ல பழக்கங்கள் உள்ளவனா... ஒரு பெண்ணை வைத்துக் காப்பாற்றும் தகுதி உள்ளவனா... என்பவை மட்டுமே கண்டறிய வேண்டிய விஷயங்களென்று உரக்கக் கூறியிருக்கிறாள். வேறு யாரும் தவறாய்க் கேட்பார்களென்று பயப்பட வேண்டாமென்றும், அப்படிக் கேட்பவர்களிடம், "என் பெண் விரும்பினான்... பையனும் என் பெண்ணை வைத்துக் காப்பாற்றும் தகுதி பெற்றவன்... படித்தவன்... வேறு என்ன வேண்டும்...?" என்று கேட்கச் சொல்லியிருக்கிறாள். அவ்வாறு கேட்கத் துணிந்தால் நாளை எவனும் நாக்கில் நரம்பு வைத்து குசும்பு பேசமாட்டானென்று விளம்பியிருக்கிறாள்.

மகளின் சாதுர்யமான பேச்சு சுந்தரராமனைக் கிளறியிருக்கிறது. தண்ணீர் கண்ட சுண்ணாம்புக் காளவாயாய் உஷ்ணம் உக்கிரமடைந்திருக்கிறது. அருகில் வாகாய் நின்றிருந்த ப்ரியாவின் கழுத்தருகில் கை வைத்து தாவாங்கொட்டையை வசதியாய் கைக்குள் இடுக்கி ஒரு தள்ளு தள்ளியிருக்கிறார். சரசரத்த பாவாடையில் கால் தடுக்கி அருகிலிருந்த அம்மிக் கல்லில் நெற்றிப் பொட்டு மோத, அந்தக் கணத்திலேயே– ரத்த நுரை வெளிப் பொங்கி வழிய, ப்ரியா உயிரை விட்டிருக்கிறாள்.

தன் மகளின் ரத்தத் துளிகளை கண் முன்னே கண்டதும் பீதியில் உறைந்து போயிருக்கிறார் சுந்தரராமன். கண்கள் நிலைகுத்தி, சரிந்து கிடந்த ப்ரியாவைப் பார்த்த அவரது அம்மாவும் மனைவியும் பதைபதைத்துப் போயிருக்கின்றனர்.

"அவ அப்படி என்னத்த செஞ்சுட்டா? லவ்வுதான... ஒரு வயசு வந்தவனைத்தானே... அதுவும் தனக்குத் தகுதின்னு நெனச்சவனைத்தானே... அவ என்ன வேசித் தொழில் பண்றேன்னு போனாளா... இல்ல, அடுத்தவ புருஷனை இழுத்துண்டு ஓடினாளா... அவளைப் போயி கொன்னுட்டியேடா பாவி..." என்று அம்மாவும் மனைவியும் ஏக வசனத்தில் ஏச, சுந்தரராமன் தன் நிலை உணர்ந்திருக்கிறார்.

'யாரோ என்னவோ பேசுவான்றதுனால நாமளா இப்படி செஞ்சுண்டுட்டோமோ.. புறம் பேசறவா வாயை ப்ரியா சொன்னா மாதிரி 'நறுக்'குன்னு பேசி அடக்கிப் பாக்க, அப்புறம் ஒரு பய வாயத் தெறக்க மாட்டானோ... அவமானம், வெட்கம், தலைகுனிவு எல்லாம் நாமளா நெனச்சுக்கறதுதானோ.. நாம விரைச்சு நின்னாக்க யாரால நம்ம முதுகை வளைக்க முடியும்...? தலையை கவுக்க முடியும்...? அடுத்தவா கேலி பண்றதா நாம நெனச்சுக்கறது எல்லாம் நம்ம மனசு பொறுத்த விஷயம்தானோ...!'

சுந்தரராமனுக்கு கொஞ்சம் கொஞ்சமாய் ஏதோ புரிய ஆரம்பித்திருந்தது.

அவர் சொல்லச் சொல்ல எனக்கும் என்னைப் பற்றி வெட்கம் பிடுங்கித் தின்றது. ப்ரியாவின் சாவுக்கு நானும் ஒருவிதத்தில் காரணமாயிருந்திருக்கிறேன். அன்று சுந்தரராமன் என் இல்லம் தேடி வந்திருந்தபோது, அவரை நான் அலட்சியப்படுத்தாமலிருந்திருந்தால்... ப்ரியாவின் காதல் விஷயம் எனக்குக் குமட்டாமலிருந்திருந்தால்... முஸ்தபாவின் கடிதம் எனக்கு அருவருப்பாய்த் தோன்றாமலிருந்திருந்தால்...

சில உயிர்களைக் காவு கொண்ட பின்னரே சில மாற்றங்கள் முகிழ்க்கின்றன.

நரசிம்ஹ அவதாரத்துக்குத் தனியான ஏற்றம் தருவது அவருடைய அத்யத்புத ரூபம்.

'ஸ்தம்பே ந த்ருஷ்யதே...?' என்று (ஸ்தம்பத்திலே – தூணிலே – தெரியலையே...?) என்று ஹிரண்ய கசிபு கேட்டபோது

'ஸ்தம்பேந த்ருஷ்யதே' (ஸ்தம்பத்திலேதான் தெரிகிறான்) என்று பதில் சொல்கிறான் குழந்தை பிரஹலாதன்.

"எனக்குத் தெரியாமல் உனக்குத் தெரிகிறானா...? இரு! இதோ உன் தலை வேறு, உடம்பு வேறுன்னு துண்டிக்கறேன்... அது பிரிஞ்சு போய்த் துடிக்கறச்சே அவன் வந்து தைப்பானா? பார்ப்போம்!" என்கிறான் அரக்கன்.

"அந்தக் காரியம் அவன் பண்ண மாட்டான்!" என்கிறான் பிரஹலாதன்.

"அவன் பண்ணமாட்டான் என்றால் நீ ஏன் அவனை ஆச்ரயிக்கிறாய்...?"

"அங்கே ஸ்தம்பத்திலே இருக்கிறவன் என்ன அவ்வளவு கடினாத்மாவா... நீ கத்தி எடுத்து வெட்டறேன்னு சொல்றியே... அந்தக் கத்தியைக் கழுத்தருகே கொண்டு வர முடியுமா உன்னாலே! அதுவரை அவன் பார்த்துக் கொண்டிருப்பானா...!" என்கிறான் பிரஹலாதன்.

அவ்வளவு விச்வாசம் பகவானிடத்திலே!

அந்த மாதிரி பூரண விச்வாசம் வைத்தால்தான் 'என்னை ரக்ஷிக்க வேண்டிய பொறுப்பு உன்னுடையது!' என்று பகவானிடத்திலே உரிமை கொண்டாடலாம்.

விச்வாசம் பண்ணுவதற்கு முன்னே சரணாகதி பண்ணினால் எடுபடுமா...?

யாகம் பண்ண ஒருவர் இரவிய உதவி செய்கிறார். நம்பிக்கை இல்லாமலேதான் செய்கிறார். ஆனால் யாகம் செய்து மழை பெய்த பிறகு அவருக்கு நம்பிக்கை வருகிறது! சரணாகதி விஷயம் அப்படி இல்லை...

## 20 முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

விச்வாசம் இல்லாமல் சரணாகதி பண்ணினால் பலிக்காது.

எம்பார் அவர்கள் காலட்சேப கோஷ்டியிலே இருந்த தமது சிஷ்யர்களுக்குச் சொல்லுவார் : "கர்ம, ஞான, பக்தி யோகமெல்லாம் பண்ணுவது கஷ்டம். அதெல்லாம் பண்ணி அவஸ்தைப்படாமல் சரணாகதியை சுலபமாகப் பண்ணிவிடலாம் என்று எண்ணிக் கொள்ளக்கூடாது. ஏனென்றால் சரணாகதிக்கு முன்னாடி மஹாவிச்வாசம் என்று ஒன்று இருக்கே... அது சுலபத்திலே வருவதில்லை... அக்கம்பக்கத்திலே உள்ளவர்களிடம் ஏற்படும் விச்வாசம் கூட நமக்கு பகவானிடத்திலே வருவதில்லை. கல என்னுக்கட்டு கல எண்ணெய் ஆன கதைதான்..." என்பார்.

சொல்லிவிட்டு கதையையும் விளக்குவார் :

பூர்வ காலத்திலே ஓர் எண்ணெய் வியாபாரி இருந்தான். நித்யம் எண்ணெய் வியாபாரம் செய்து வந்தான் அவன். செக்கு ஆடி, எண்ணெய் பிழிந்து, வியாபாரம் செய்ய வேண்டும்.

ஒருநாள் அவன் செக்கு இரண்டாக உடைந்து போயிற்று! இன்னொரு செக்கு செய்வதற்கு மரத்தைத் தேடிப் போனான். ஒரு பிரும்மாண்ட மரம் – செக்குக்கு ஏற்றது என்று நான்கு ஆட்களைக் கூப்பிட்டு மரத்தை வெட்டச் சொன்னான். நாலு ஆட்களும் தலைப்பாகையைக் கட்டிக் கொண்டு கோடரியை எடுத்து ஓங்கிய நேரத்திலே...

அந்த மரத்திலிருந்து 'பொத்'தென்று ஒன்று குதித்தது! குதித்து, எண்ணெய் வியாபாரியின் திருவடியை கெட்டியாகப் பிடித்துக்கொண்டது.

"இந்த மரத்தை வெட்டாதே! இதில் ரொம்ப நாட்களாக நான் இருக்கிறேன். இதை வெட்டினாயானால் எனக்கு வாசம் செய்ய வேறு இடம் இல்லாமல் போய்விடும்..." என்றது.

எண்ணெய் வியாபாரி யோசித்தான்... அவன் யோசிப்பதைப் பார்த்து அது மேலும் சொன்னது :

"இந்த எண்ணெய் வியாபாரம் உனக்கு எதுக்கு...? கையெல்லாம் எண்ணெய் ஒட்டிக்கொண்டு... சங்கடமில்லையா... நீ எள்ளு வியாபாரம் செய்யலாமே? அதுக்கு நான் உதவி செய்யறேன். தினமும் சூர்ய அஸ்தமன வேளையிலே உன் வீட்டு வாசலில், ஒரு கல எள்ளு ஆகும்படியான அளவுக்கு எள்ளுக் கட்டைக் (எள் விளைந்த கதிர்கள்) கொண்டு வந்து போடுகிறேன்..." என் றது.

இவ்வளவு தூரம் அது பேசிய பிறகு அவன் கேட்டான் : "இத்தனை அக்கறையாகச் சொல் கிறாயே, நீ யார்...?" என்று.

"நான் இந்த மரத்திலே ரொம்ப நாட்களாக இருக்கிற பிசாசு!" என்றது அது.

நடுநடுங்கிப் போய் விட்டான். முதலில் அதனிடம் பேச பயப்படாதவன் 'பிசாசு' என் றவுடனேயே பயந்து விட்டான். ஆனால் அது அவன் திருவடியைப் பிடித்துக் கொண்டு தொடர்ந்து கெஞ்சுவதைப் பார்க்க, அவனுக் குத் தைரியம் வந்து விட்டது.

"சரி... மரத்தை வெட்டவில்லை. ஆனால் சொன்னபடிக்கு நீ எள்கட்டுக் கொண்டு போடாவிட்டால் நான் என்ன செய்ய...?" என் றான்.

"நான் என்ன மனிதனா... ஒரு சொல் சொல்லிவிட்டு அதைச் செய்யாமல் போற துக்கு...? துர்தேவதையானாலும், கொடுத்த வாக்கைக் காப்பேன்" என்றது!

துர்தேவதைகளும் பரிகசிக்கிற அளவுக்கு நமது நிலை ஆகியிருப்பதைப் பாருங்கள்!

**எ**ண்ணெய் வியாபாரி பிசாசு சொன்னதை ஒப்புக்கொண்டு மரத்தை வெட் டாமல் போனான்.

சொன்னதுபோலவே ஒரு கலம் எள் ஆகும் படியான எள்ளுக்கட்டை தினமும் ஆறு மணிக்கு அவன் வீட்டில் கொண்டு போட்டது அந்தப் பிசாசு.

போகப் போக ஆறு மணி என்பது ஆறரை ஆயிற்று. அப்புறம் ஏழு... ஏழரை... என்றாகி...

---

"என்ன முருகேசா, வீட்ல அம்மா அப்பா சௌக்யமா? தங்கச்சி கல்யாண வேலை எல் லாம் ஒழுங்கா நடக்குதா?"

"அண்ணே, உங்களுக்குத்தான் எங்க வோட்டு. நீங்க பஞ்சாயத்து தலைவர் பதவிக்கு போட்டி போடறது தெரியும்!"

– பம்பாய் முத்துமணாளன்.



ஒருநாள் இரவு ஒரு மணிக்குக் கொண்டு வந்து எள்கட்டைப் போட்டது!

ஏன் என்று பார்த்தால்... பிசாசுக்கு எள் பயிரிட முடியுமா...? யார் யாரோ பயிரிட்டதை அறுத்துக் கொண்டு வந்து அது போட்டு விடுகிறது. நிரந்தரமாக எள் பயிர் செய்பவர்கள் கிடைப்பார்களா என்ன...?! அதனாலே அந்த எள்ளுக்காக பிசாசு பட்ட அவஸ்தை கொஞ்ச நஞ்சமில்லை! நாளா திக்கிலும் போய்த் தேடி அலைந்து அவஸ்தைப்படுகிறது.

ஒருநாள் இரவு இரண்டு மணிக்கு எள்ளுக் கட்டைக் கொண்டு வந்து போட்டுவிட்டு அது யோசிக்க ஆரம்பித்தது.

'இந்த வேலையை தினமும் பண்ணு கிறோமே... எதற்காகப் பண்ணுகிறோம்...? குடியிருந்த அந்த மரத்தை ரக்ஷிக்கத்தானே பண்ணுகிறோம். ஆனால் இந்த வியாபாரி விடத்திலே இந்த வாக்கைக் கொடுத்த பிறகு ஒருநாள் கூட அந்த மரத்திலே போய் உட்கார முடியலையே... இந்த நிலையை விட அவன் அந்த மரத்தை வெட்டிக் கொண்டு போகவே அனுமதித்திருக்கலாம் போலிருக்கிறதே...! மூன்று மாத காலமாக வீணான காரியத்தை யல்லவா நாம் பண்ணிக் கொண்டிருக் கிறோம்... இன்றைக்கு எப்படியாவது ஒரு நிமிஷமாவது அந்த மரத்திலே போய் உட்கார வேண்டும்' என்று தீர்மானம் பண்ணிக் கொண்டது.

**இ**ப்படிப் பிசாசுக்கு வந்த விவேகம் மனி தனுக்கு வருமா...? என்று கேள்வி எழுப்புவார் எம்பார்! 'மனிதன் உட்கார்ந்து அறியான்! எத்தனை நாள் ஆனாலும் தேக சஞ்சாரம் பண்ணுவதற்கே சரியாயிருக்கிறதே... எப்போது மனிதனுக்கு விவேகம் வருமோ...?' என்பார்.

இன்றைக்கு எப்படியாவது நேரத்திலே போய் உட்காரணும் என்று தீர்மானித்த பிசாசு அந்த மரத்திடம் போனது. அங்கே போனால்... அந்த மரத்திலே வேறொன்று உட்கார்ந்திருந் தது! நூதனமான புதுப் பிசாசு அது!

புதுப் பிசாசைப் பார்த்துப் பழைய பிசாசு "நீ யார்?" என்று கேட்டது!

புதுப் பிசாசு சொன்னது : "உன்னைப் போல ஒரு பைத்தியம் உண்டா? மனுஷனைப் பிடித்துக்கொண்டு பிசாசு ஆட்டும் என்பார் கள். உன்னைப் பிடித்துக்கொண்டு அந்த மனிதன் ஆட்டுகிறானே...! உன்னைப் போல அசடு உண்டா? நீ போன பிறகு மூன்று மாத மாக இந்த மரத்திலே நான் வசித்து வருகிறேன். இப்போது நீ வந்திருக்கிறாய். உன்னை விரட்டியடிக்க நான் தயாராயில்லை... ஒன்று செய்கிறேன் – அந்த எண்ணெய் வியாபாரி யைக் கொன்றுவிட்டு வருகிறேன் – அதன் பிறகு எனக்கும் இந்த மரத்திலே இருக்க நீ

இடம்கொடுப்பாயா?" என்றது.

"அந்தக் காரியத்தை நீ பண்ணினால் நீயும் நானும் சௌக்கியமாக இருக்கலாம்..."

'சரிதான்' என்று கிளம்பிய புதுப் பிசாசு நேராக எண்ணெய் வியாபாரி வீட்டின் புழக் கடைக்குப் போயிற்று. அங்கே இரண்டு மாட்டுக் கொட்டகைகள் இருந்தன. ஒன்றில் இருபது மாடுகள் இருந்தன. இன்னொன்றில் ஒரே ஒரு மாடு தனித்து இருந்தது. அந்த இரண்டாவது கொட்டகையிலே போய் உயரத்திலே உட்கார்ந்துகொண்டது புதுப் பிசாசு. விடியற் காலை எண்ணெய் வியாபாரி கொட்டகைப் பக்கம் வந்தால் அவனை அமுக்கிக் கொன்று விடலாம் என்று காத்துக் கொண்டிருந்தது.

ஆனால் விடிந்து நேரமாகியும் எண்ணெய் வியாபாரி மாட்டுக் கொட்டகைக்கு வரவே யில்லை. ஓர் அரசமரத்தடியிலே உட்கார்ந்து கொண்டு மாடுகளுக்கு லாடம் அடிக்கும் வேலையை மேற்பார்வை பார்த்துக் கொண்டிருந்தான். ஒவ்வொரு மாடாகப் பிடித்து அழைத்து வரும்படி பணியாட்களுக்குக் கட்டளையிட்டுக் கொண்டிருந்தான்.

"அதோ அந்தக் கொட்டகையிலே இருக்கிற புதுப் பிசாசைப் பிடித்துக் கொண்டு வா!" என்று ஒரு கட்டளை அவனிடமிருந்து வரவும் நடுநடுங்கிப் போய் விட்டது புதுப் பிசாசு!

எண்ணெய் வியாபாரி குறிப்பிட்டது தனியே கட்டியிருந்த மாட்டை! அது சந்தையிலே பிடித்த புது மாடு. முரண்டு பண்ணி மற்ற மாடுகளை இடித்ததால் தனியே கட்டி வைத்திருந்தார்கள்.

நிஜ பிசாசோ, தன்னைத்தான் எண்ணெய் வியாபாரி பிடித்து லாடம் அடித்துவிடுவான் என்று பயந்தது! ஓடிப் போய் அவன் திருவடிகளில் விழுந்து 'என்னை ஒன்றும் பண்ணி விடாதே!' என்று கெஞ்சியது!

"நீ யாரு?" என்று கேட்டான் அவன்!

"நான்தான் புதுப் பிசாசு..."

"புதுப் பிசாசா?"

"என்னை ஒன்றும் செய்யாமல் விட்டாயானால் அந்தப் பழைய பிசாசைக் காட்டிலும் உனக்குச் சகாயமாய் இருப்பேன். அது ஒரு கலம் எள்ளு ஆகும்படியான எள்ளுக் கட்டை தினமும் உனக்குக் கொண்டு போட்டது. நான் ஒரு கலம் எண்ணெயே பிழிந்தெடுக்கும் அளவுக்கான எள்ளுக்கட்டை தினமும் கொண்டு போடறேன்..."

"கட்டாயம் போடுவாயா...?"

"கட்டாயம் போடுவேன்..."

"அப்படியானால் போ!" என்றான் எண்ணெய் வியாபாரி.

தலையைச் சொரிந்தபடி போய் பழைய பிசாசைப் பார்த்தது புதுப் பிசாசு!

## எறும்பார் கடிக்கிறார்!

*பதினைந்து கோடி ரூபாய் அளவுக்கு என் பெயரிலும் சில பினாமிகள் பெயரிலும் நான் சொத்துக்களை வைத்திருப்பதாகக் கூறுவது முழுக்க முழுக்க பொய் என்பது மட்டுமல்ல அடிப்படையற்ற குற்றச்சாட்டு.*

*- ஜெயலலிதா*




"என்ன, போன காரியம் முடிந்ததா?" என்று அது கேட்க, இது நடந்த கதையைச் சொல்ல... "நான் ஒப்புக் கொண்டதைக் காட்டிலும் அதிகமாக அல்லவா நீ ஒப்புக் கொண்டிருக் கிறாய்... உனக்கெங்கே இந்த மரத்துக்கு வர நேரமிருக்கப் போகிறது!" என்றது அது!

கலம் எள்ளு கலம் எண்ணெய் ஆன கதை இதுதான்.

கர்ம யோகமும் ஞான யோகமும் கடினமானவை. அதனால் சரணாகதியைச் சுலபமாகப் பண்ணிவிடலாம் என்று நாம் எண்ணினால் இந்தக் கலம் எண்ணெய் போல் ஒரு விஷயம் குறுக்கே வருகிறது. அந்த விஷயம் தான் மகாவிச்வாசம்! கலம் எண்ணெய்க்கான எள்ளுக்கட்டை தினமும் அடைவது எவ்வளவு கஷ்டமோ அவ்வளவு கஷ்டம் சரணாகதிக்கான மஹா விச்வாசத்தை நம் மனத்திலே எய்துவது.

பகவான் எதிரே இருக்கிறான் என்ற பாவனையில் தூபம், தீபம், நைவேத்தியம் என்று சமர்ப்பிக்கிறோம். அவன் வாஸ்தவத்தில் அங்கே உட்கார்ந்திருக்கிறான், நம்மைப் பார்த்துக் கொண்டிருக்கிறான் என்கிற எண்ணம் நமக்கு வர வேண்டாமா? பூரணமான விச்வாசம் வர வேண்டாமா...? அது வருவது ரொம்ப சிரமம்.

அந்த விச்வாசம் பிரஹலாதனுக்கு இருந்தது. அதனால்தான் இந்த அத்தியாயத்தின் ஆரம்பத்திலே சொன்னதுபோல் உறுதியுடன் அவனால் பேச முடிந்தது!

(தொடரும்)

**தா**டி வைத்திருந்தார். 'எள்ளும் அரிசியும் கலந்த மாதிரி' என்று பாட்டி சொல்கிற மாதிரி தாடி. பறங்கிப்பழ உடம்பு. ஜிப்பா. கருப்புக் கலரில் பேண்ட். மூக்குக் கண்ணாடி.

"அம்பது வயசும்மா..." என்றபோது குரலில் கணீர்.

முன்கூட்டியே தகவல் அறிவித்து இன்றைய ஞாயிறின் பிற்பகலில்...

'ரெண்டு மணிக்கு மேல வரட்டுமா... வசதிப்படுமா...' என்று கேட்டு நிச்சயித்த சந்திப்பு.

வந்தபோது மணி இரண்டரை. காலிங்பெல் சப்தம் அவருக்குப் பிடித்திருக்கிறதாம்.

"சில பேர் வீட்டுல, வந்தவன் திரும்பிப் போனப்புறமும் டிங்டிங்னு அடிச்சகிட்டிருக்கும்" என்றார் தொற்றிக் கொள்ளும் சிரிப்புடன்.

மணிமேகலை புடைவைக்கு மாறியிருந்தாள். நாற்பத்தி இரண்டு வயசுக்கு விடுமுறை நாட்களில் 'நைட்டி'யே பழகி விட்டது.

வரப் போகிற சுந்தரமூர்த்தி 'இன்னாரென்று' புலப்படாததால் சம்பிரதாய அனுசரணை.

"சில பேர் ஸண்டே மத்தியானம் தூங்குவா. நான் மியூசிக் கேட்பேன். கர்னாடிக்... வெஸ்டர்ன்... எதுவும் விதிவிலக்கில்லை. முந்தாநாள் புஷ்பவனம் கேட்டேன்..."

ரொம்ப நாள் பழக்கம் போல சுவாதீனமாய் அமர்ந்திருந்தார்.

"நான் புக்ஸ் படிப்பேன்..." என்றாள்.

"தெரியறது... ஷெல்ஃப்ல பார்த்தா... எப்படி டேஸ்ட்... பார்க்கலாமா?"

பதிலுக்குக் காத்திராமல் விருட்டென்று எழுந்தார். ஆன வயசுக்கு கொஞ்சம் கூடவே துறுதுறுப்பு. பாட்டி இருந்தால்... 'புள்ளை இல்லாத வீட்டுல...' ப்ச்... என்னது... எப்ப பார் பாட்டி ஞாபகம்.

மணிமேகலை சுதாரிப்பதற்குள் சு. மூர்த்தி கையில் புத்தகங்கள். வரிசையிலிருந்து உருவியிருந்தார்.

"முன்னே மாதிரி படிக்க முடியலே. லேசா தலையை வலிக்க ஆரம்பிச்சுருது. பட்... மியூசிக் கேட்டா நோ ப்ராப்ளம்."

வந்து அமர்ந்து கொண்டார்.

"டீ ஆர் காப்பி?"





# ஏன்?

"டீ..."

ஒரு ட்ரேயில் பிஸ்கட்டும் இரண்டு கப்புகளில் டீயுமாகத் திரும்பினாள்.

"இது நீ போட்டதா..." என்றார் முதன் முறையாய் நேரடியாய் ஒருமையில் விளித்து.

"இல்லே... வாங்கினது..."

சமையலறையை எட்டிப் பார்த்தார்.

"நீட்டா இருக்கு..."

பெட்ரூம் வாசலில் அவர் சற்று முன் தொட்ட மணிக் கொத்து இன்னமும் காற்றில் ஆடிக் கொண்டிருந்தது.

டீயை உறிஞ்சினார்.

"ஏன் திடீர்னு அப்படி ஒரு விளம்பரம் கொடுத்தேன்னு தெரிஞ்சுக்கலாமா?"

மணிமேகலை தன் விளம்பர வரிகளை நினைவில் கொண்டு வந்தாள்.

"...அரசு அலுவலகம் ஒன்றில் வேலை பார்க்கும் 42 வயது மாநிற, சராசரி உயர, அதிக பருமன் இல்லாத பெண்ணுக்கு வரன் தேவை. போஸ்ட் பாக்ஸ் நெ..."

"ரொம்ப சுருக்கம். அப்புறம் உன்னோட லெட்டர்ல விரிவா எழுதினே. ஒரு தம்பி... ஒரு தங்கை செட்டில்டு. அப்பா அம்மா இல்லை. சொந்த ஃப்ளாட். சரியா..."

மணிமேகலை தலையசைத்தாள்.

"இன்ஃபாக்ட்... நான் ஒரு விடோயர். கல்யாணம் ஆகி ஒரே வருஷம்... போயிட்டா. முதல் டெலிவரி... தாயும் குழந்தையும்... ஆண் குழந்தை... மூன்றரைக் கிலோ இருந்துதாம்..."

சுமூர்த்தி கண்ணாடியைக் கழற்றியது இயல்பாக இருந்தது. கண்களைத் துடைக்கவில்லை.

"அப்புறம் வேற கல்யாணம் செஞ்சுக்கப் பிடிக்கலை. அப்படியே இருந்துட்டேன். தம்பி, தங்கை எனக்கும். அவங்களும் செட்டில்டு... ப்ச்... எனக்குத்தான் எங்கேயும் ஒட்டலே..."

"டிபன் ஏதாவது செய்யவா..." என்றாள்.

"ம்... என்ன செய்யலாம்..."

"ரெடி மிக்ஸ் இருக்கு..."

"வேணாம்... அலுத்துப் போச்சு."

"ஓ... சமையல் நீங்கதானா?"

சிரித்தார். பற்களின் பளீர்.

"ஆளை வேலைக்கு வச்சா... அவ இஷ்டத்துக்கு நான் மாறணும்... ஏன் வம்பு?"

"பஜ்ஜி... போண்டா... ஒத்துக்குமா?"

கேட்டபிறகு அப்படிக் கேட்டிருக்க வேண்டாமோ என்று தோன்றியது. 'வயசானவர்' என் பதைச் சுட்டுகிற மாதிரி.

"ஓக்கே... உனக்குப்

## அருள்வாக்கு



வித்வான்கள் வித்யையை ஈச்வரோபாஸனையாக, அதாவது வேறு ப்ரதிப்ரயோஜனம் எதிர்பாராமல், பேணி வளர்த்துக் கொள்ள ப்ரயத்தனம் பட்டால் எப்படியாவது அவை உயிரைப் பிடித்துக் கொண்டு வ்ருத்தியாகிவிடும்; அவர்களும் உயிரைப் பிடித்துக் கொண்டு காலம் தள்ள ஈச்வரன் கைகாட்டாமல் போகமாட்டான்.

இப்படிப் பலர் இருந்துமிருக்கிறார்கள். பரமபக்தரான த்யாகையர்வாள் போன்றவர்கள்தான் ராஜ ஸம்பாவனை, பேர், புகழ் முதலியன வேண்டாம் என்று ஒதுக்கி, ஒதுங்கி அவர்கள் பாட்டுக்கு இருந்தார்களென்றில்லை. மஹாவித்வான்களிலுங்கூடப் பணவசதி, பாராட்டு, ப்ராபல்யம் வேண்டாம் என்றே இருந்தவர்களுண்டு.

வித்வானாக இருக்கிறவர் பணத்தைத் தள்ளுவதை விடப் பாராட்டைத் தள்ளுவது ச்ரமம். தனக்கு நல்ல புத்தி இருக்கிறது, நிறையத் தெரிந்து கொண்டிருக்கிறோம், ஆராய்ச்சி செய்து பெரிசாக எழுதியிருக்கிறோமென்றால் உடனே இதை லோகம் 'ரெகக்னைஸ்' செய்யவேண்டும், தம்மைப் புகழ வேண்டும், மரியாதை பண்ண வேண்டும் என்ற எண்ணங்களும் ஏற்பட்டு விடுகின்றன. ஓரேயடியாக வித்யா கர்வம் ஏறி, இந்த உலகத்துக்கு நம்மைப் புரிந்து கொள்ளச் சக்தி உண்டா, நம்மைப் பாராட்ட அதற்கு யோக்யதை உண்டா என்று நினைக்கிற அளவுக்கும் சில வித்வான்கள் போய் விடுகிறார்கள். ஆதலால் அவர்கள் வித்வத்துக்காகப் பாடுபடுகிறது போலவே, அல்லது அதை விடவும், அதோடுகூட விநய ஸம்பன்னர்களாவதற்கும் பாடுபட வேண்டும்.

**– ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**

பிடிச்சது எதுவானாலும்..."

''உனக்குப் பிடித்தது...' என்ற வரி அவனுக்குப் பிடித்தது. சற்று அதீத உணர்ச்சி தான். ஆனாலும் இத்தனை வருஷங்களில் கேள்விப்பட்டிராத பிரயோகம்.

"தேங்காய் சட்னி அரைச்சிடறேன். மார்னிங் சாம்பார் கூட இருக்கு..."

எழுந்தான்.

"நான் வேணா... ஹெல்ப்..."

"பரவாயில்லே... லைட் டிபன்தானே..."

டேப் ரிகார்டரை எதிரில் வைத்தான்.

"எப்பவோ வாங்கின நாலஞ்சு கேசட்தான் இருக்கு..." என்றான் சங்கடமாய்.

அரைமணியில் டிபன் ரெடி. இடையிடையே பேச்சு. இப்போது வார்த்தைகள் இன்னமும் இலகுவாய் எல்லை ஏதுமற்று இயல்பாய்ச் சுழன்றன.

"புடைவை உனக்குக் கஷ்டமா இருக்கு..." என்றார் அவன் படும் சிரமம் பார்த்து.

"அதெல்லாம் ஒண்ணுமில்லே..."

"நோ ரெஸ்ட்ரிக்ஷன்... நீ, நீயாகவே இரு..."

கேட்டு வாங்கிச் சாப்பிட்டார்.

"உன்னோட தம்பி... தங்கை... என்ன சொல்லுவாங்க?"

"உங்க தம்பி... தங்கை?"

"ம்..." தோளைக் குலுக்கினார்.

"மறுக்க மாட்டாங்கன்னு தோணுது. என் விருப்பம்தானே... ஆனா... இப்ப உன்னை நேர்ல பார்த்தப்புறம்..."

"பார்த்தப்புறம்...?"

"ரொம்ப சின்னப் பொண்ணா இருக்கியே. ஐயாம் பிஃப்டி இயர்ஸ் ஓல்டு..."

லேசாய்ச் சிரித்தார்.

மணிமேகலை மௌனமாய் இருந்தாள்.

**ப**தினாறு வருஷங்களுக்கு முன்.. ஒரு பெண் பார்த்தல் படலம். 'அம்மா, அப்பா இல்லாதவா... சரி.. தம்பி, தங்கையை கரையேத்தணும். சரி, ஆனா பொண்ணைப் பார்த்தா... வயசானவா மாதிரி இருக்காளே.'

"என்ன... யோசனை..."

"ஒண்ணுமில்லே..." என்றான்.

"சொல்லு. என் கேள்விக்கு நீ இன்னமும் பதிலே சொல்லலே... திடீர்னு இப்ப எதனால அந்த விளம்பரம்? அதுவும் என்னைப் போய் சூஸ் பண்ணி பதில்... இப்ப கூட விருந்தோம்பல்... என்னம்மா..."

இதே புரிந்து கொள்ளுதல், அனுசரித்தல், விட்டுக் கொடுத்தல், சக மனிதநேயம் எல்லாம் அந்த வயசுக் காலத்தில் அமையாமல் போனதுதான் என்று எதை எதையோ யோசித்து... சொன்னான்.

"தனிமை... தனிமைதான் என்னால தாங்க முடியலே..." – லேசாய்க் கண் கலங்கியிருந்தது.

# சுஜாதா பக்கம்



ஒய். ஜீ. மகேந்திராவின் 'சக்தி' நாடகத்தில் சுழலும் மேடை அமைத்து ப்ளேன் டேக் ஆஃப் போன்ற காட்சிகள் அமைத்து ஒரு சஸ்பென்ஸ் கதையை இயக்கியிருக்கிறார். (கதை, வசனம் - பத்து) மகேந்திரா தமிழ் மேடை நாடகத்தை உயிருடன் வைத்திருக்கும் அரிய பிரஜைகளில் ஒருவர். பூர்ணம் விசுவநாதன், கோபால கிருஷ்ணன், எஸ்.வி. சேகர், கிரேஸி மோகன்களின் எண்ணிக்கை பயங்கரமாகக் குறைந்து வருகிறது. பாம்பே சாணக்யா, ராது போன்றவர்கள் தொடர்ந்து நாடகங்கள் எழுதிக் கொண்டிருக்கிறார்கள். இருந்தும் இந்த நாட்களில் நாடகங்கள், ஸ்பான்ஸர் என்னும் புதிய ஆதரவாளர்களின் உபயத்தில்தான் சாத்தியம். தேக்குமரப் பண்ணையோ, விடுமுறை விடுதியோ, சீட்டுக் கம்பெனியோ, அவர்கள் விளம்பரத்தை பின் திரையில் ஒட்டும் பட்சத்தில் கொஞ்சம் ஆதரவு தருகிறார்கள். இதில்தான் நாடக உலகமே இன்று இயங்கிக் கொண்டிருக்கிறது. நிலைமை கவலைக்கிடம் என்பதில் யாருக்கும் சந்தேகமில்லை. எல்லாரும் "ஏதாவது செய்யனும் சார்" என்கிறார்கள். ஏதாவதின் பொருள் அடக்கம் சொல்வதில்லை. நாடகத்தின் பிரபலக் குறைவுக்கு டீவியைக் காரணம் சொல்கிறார்கள். அமெரிக்காவில் சிறிய நகரில் கூட நாற்பது சானல்கள் இருந்தும் மேடை நாடகம் தழைத்துள்ளது. டீவி. பார்க்கிறவர்கள் தனி இனம். நாடகம் பார்க்கிறவர்கள் தனி. இந்த நிலை மராத்தி, பெங்காலி, ஹிந்தியிலும் உள்ளது. தமிழில் வர, நாம் செய்ய வேண்டியதை யோசித்துப் பார்த்தேன்.

தமிழில் மேடை ஏற்றக் கூடியதான போதுமான நல்ல நாடகங்கள் இல்லை.

எல்லோரும் சொந்தமாகத் தம் நாடகத்தை எழுதி மேடையேற்ற விரும்புகிறார்கள். தேவையில்லை. அருமையாக எழுதப்பட்ட நாடகங்கள் உலக இலக்கியத்தில் பல உள்ளன. சென்னை போன்ற இடங்களில் அமெரிக்கன் லைப்ரரியிலும் பிரிட்டிஷ் கவுன்சிலிலும் நூற்றுக் கணக்கான நாடகங்கள் உள்ளன.

கல்லூரி அமெச்சூர் குழுக்கள் பிறரால் எழுதப்பட்ட நாடகங்களை மேடையேற்றும் பழக்கம் பெற வேண்டும். சங்கீத நாடக அகாதமி வருஷா வருஷம் சிறந்த நாடகத்துக்குப் பரிசளிக்கிறார்கள். பரிசு பெற்ற தமிழ் நாடகங்கள் பல உள்ளன. அவை பற்றிப் பொதுவாக யாருக்கும் தெரியவில்லை. காரணம் இந்தப் பரிசுக்கு பொதுவாக தஞ்சாவூர், பாண்டிச்சேரி போன்ற இடங்களில் உள்ள தனிக்குழுக்கள் ஓரிருமுறை அரங்கேறிய சோதனை நாடகங்களையே அனுப்பி, பரிசு பெறுகிறார்கள். இதில் ஒரு மகத்தான சதி இயங்குவதை கவனிக்கலாம்.

உலக இலக்கியத்தில் உள்ள பல நல்ல நாடகங்களை மொழி பெயர்த்தோ, தழுவியோ புத்தகங்கள் வெளி வர வேண்டும். இந்திரா பார்த்தசாரதி இங்கியரை செய்தது போல் ஸோஃபக்ளிஸ், செகாவ், இப்சன் இவர்களின் மொழி பெயர்ப்புகள் ஒன்றிரண்டே உள்ளன. இவை அதிகம் வர வேண்டும்.

டிசம்பர் கச்சேரிகள் ஆர்கெஸ்ட்ரா சமாசாரங்களிலிருந்து தனிப்படுத்தி, நாடகத்துக்கென்றே ஒரு தியேட்டர் அமைத்து தினம் நாடகங்கள் நடத்த ஏற்பாடு செய்ய வேண்டும்.

இதற்கான உதவிப்பணம் தமிழ்நாடு அரசு, சங்கீத நாடக அகதமி போன்றோர்களிடமிருந்து பெற வழிமுறைகள் உள்ளன. நாடக விமர்சனங்கள் தவறாமல் பத்திரிகைகளில் வர வேண்டும். எப்போதாவது கல்கி அல்லது விகடனில் ஓரத்தில் இடமிருந்தால் ஃபில்லர் மேட்டர் போல எழுதுகிறார்கள். புத்தக விமர்சனம், சினிமா விமர்சனம் போல நாடக விமர்சனமும் தவறாமல் வர வேண்டும்.

பம்பாய், தில்லி, கல்கத்தா, பூனா போன்ற இடங்களிலிருந்து நாடகக் குழுக்கள் வரவழைத்து அவர்கள் நாடகங்களை இங்கே போட்டுக் காட்ட வசதி செய்ய வேண்டும். அநுபவப் பங்கீடான சிந்தனைப் பட்டறைகள் நடத்த வேண்டும். நாடகம் எழுதும் முறைகளைப் பற்றி சுயாட்சிக் கல்லூரிகள் பயிற்சி முகாம்கள் நடத்த வேண்டும். கலாசாரப் பரிமாற்ற திட்டங்களின் கீழ் அண்டை அயல் நாடுகளிலிருந்து நாடக வல்லுனர்களை வரவேற்க வேண்டும்.

வாரப் பத்திரிகைகள் அசட்டு நாடகங்களுக்கு மட்டுமின்றி, சிறந்த ஓரங்க நாடகங்களுக்கும் போட்டி அமைத்து, தேர்ந்தெடுத்து, பரிசு கொடுக்க வேண்டும்.

தமிழில் சில நல்ல சிறுகதைகளை நாடகமாக்கி நடித்துக்காட்ட கல்லூரிகளுக்கிடையே போட்டி அமைக்கலாம்.

தியேட்டரில் ஆர்வமுள்ள சினிமா டைரக்டர்களும் நடிகர்களும் மாதம் ஒருமுறையாவது ஒரு நாடகத்தில் பங்கேற்க வேண்டும். இங்மார் பெர்க்மன் உலகப் பிரசித்தமான சினிமா டைரக்டர், தன் எழுபத்தி மூன்றாம் வயதில் திரைப்படங்கள் எடுப்பதை நிறுத்தி விட்டார். ஆனால் நாடகத்தை அவர் புறக்கணிக்கவில்லை.

அதற்கு அவர் சொன்ன காரணம்:

"நாடகம் எனக்கு ஒரு விசுவாசமுள்ள மனைவியைப் போல".

நம் டைரக்டர், நடிகர்கள் பலரும் தம் விசுவாசமுள்ள மனைவிமாருக்குத் திரும்ப வேண்டும்.

(மீண்டும் அடுத்த வாரம்)

# ஒரு கலைக்களஞ்சிய

## விஜபிக்கு வந்த கடிதங்கள்

*ரா.கி. ரங்கராஜன்*

'அடிமையின் காதல்', 'வானின் முத்தம்' ஆகிய சரித்திரப் புதினங்களை எழுதியிருக்கிறேன். அடிமையின் காதல், பிரிட்டிஷ் ஆட்சியில் சென்னை கோட்டைப் பகுதியில் சில இந்தியப் பெண்களுக்கு இழைக்கப்பட்டக் கொடுமைகளைச் சித்திரித்தது. 'வானின் முத்தம்', பேரரசர் அக்பரைப் பற்றியது. இரண்டிற்குமே எனக்குத் தேவைப்பட்ட சரித்திரச் சான்றுகளும் சம்பவங்களும் கணிசமாகக் கிடைத்தன.

ஆனால் ஆனந்த விகடனுக்காக, கிருஷ்ணதேவராயர் பற்றிய சரித்திரத் தொடரை எழுத முடிவெடுத்தபோது, விஜயநகரப் பேரரசு மற்றும் கிருஷ்ண தேவராயர் காலத்தில் வாழ்ந்த வட இந்திய மன்னர்கள், அவர்களது வாழ்க்கை முறை இவை பற்றியெல்லாம் திருப்தியளிக்கும் விதத்தில் எழுத, 'கலைக்களஞ்சியம்' இருந்தால் மிகவும் உதவியாக இருக்குமே என்று எண்ணினேன்.

தமிழில் சிரிய முறையில் தொகுக்கப்பட்ட முதல் 'என்சைக்ளோபீடியா' இது. இதன் பிரதம ஆசிரியரான மா.ப. பெரியசாமி தூரன் எனக்கு நன்கு அறிமுகமானவர் தான். சிறந்த தமிழறிஞர். பெரியநாயக்கன் பாளையம் பள்ளியில் தலைமை ஆசிரியராக இருந்த இவரை, 'கலைக்களஞ்சியம் தயாரிப்பதில் உங்களது முழு முயற்சியும் தேவைப்படுகிறது' என்று அவினாசிலிங்கம் அவர்கள் அழைத்தார். தூரனும் சென்னையில் குடியேறினார். சென்னைப் பல்கலைக்கழகத்தின் நூலக வளாகத்தில் கலைக்களஞ்சியம் தயாரிப்புக்காக ஓர் அறை ஒதுக்கப்பட்டது. அங்கு அவரும் அவரது குழுவினரும் இருபத்தோரு ஆண்டுகள் உழைத்ததன் விளைவாகக் கலைக்களஞ்சியம் உருவெடுத்தது.



இது தொடர்பாக கல்கியில் வெளியிடப் படும் 'பாலம்' பகுதிக்கு இந்த ஆண்டு மே மாதம் 'மேற்படி கலைகளஞ்சியத்தின் பத்து வால்யூம்களும் யாராவது வைத்திருந்தால் அதை வாங்கிக் கொள்ளத் தயார்' என்று நான் வேண்டுகோள் விடுக்க, நாலைந்து பேர்தான் கடிதம் போட்டிருந்தனர். அவர்களில் ஒருவர் 'எனக்கும் அந்தக் கலைக்களஞ்சியம் தேவை. நீங்கள் எடுத்துக் கொண்டது போக யாராவது அதிகப்படி பிரதிகளை உங்களுக்கு அனுப்பினால், அதை எனக்குத் தரலாமே' என்று கேட்டிருந்தார்!

திருச்சியில் உள்ள பெர்ணான்டோ என்பவரிடம் மட்டுமே, பயன்படுத்தக்கூடியத்

23.5.1996
திருச்சி – 12.

அய்யா,

தங்களின் 18.5.96 தேதியிட்ட கடிதம் கிடைத்தது. நன்றி. எங்களது அலுவலக சூப்பிரன்டன்ட் நாளை வெள்ளி சென்னை வருகிறார்கள். அவர்களது மகன் மூலம் கலைக்களஞ்சியம் 10வது தொகுதி தங்களின் வீட்டிற்கு வருகிறது. தாங்கள் எனக்குத் தர எண்ணியுள்ள 'பட்டாம்பூச்சி'யையும் வரும் நண்பர் வசமே கொடுத்தனுப்பிக் கொள்ளுங்கள். நன்றியுடன் பெற்றுக் கொள்கிறேன்.

இச்சமயம் எனது இன்னும் ஒரு கேள்விக்கும் உங்கள் மூலம் விடைகாண விரும்புகிறேன். இதோ அது! 'கலைக்களஞ்சியம்' அதன் பிறகு ஏன் பதிப்பிக்கப்படவில்லை? தமிழக அரசோ, பல்கலைக்கழகங்களோ இந்த முயற்சியில் ஏன் ஈடுபடவில்லை? எம்.ஜி.ஆர். ஆட்சிக் காலத்தில் மீண்டும் தமிழில் கலைக்களஞ்சியம் வெளியாக நடவடிக்கைகள் எடுக்கப்படுவதாக ஒரு தகவல் வந்தது. அதோடு சரி. உங்களைப் போன்ற எழுத்தாளர்கள் ஒரு பிரபல பத்திரிகை வாயிலாக இந்தக் கேள்வியை எழுப்பி சம்பந்தப்பட்டவரின் கவனத்துக்குக் கொண்டு வந்தால் நிச்சயம் பதில் கிடைக்கும் என்று எதிர்பார்க்கிறேன்.

அன்புடன் விடைபெறும்,
ஏ.டி. பெர்னான்டோ.

தரத்தில் கலைக்களஞ்சியம் இருந்தது – அதுவும் பத்தாவது வால்யூம் மட்டும்தான். அதை இலவசமாகவே தருவதாக எழுதியிருந்தார் அவர். அந்தக் கடிதத்தில், குமுதத்தில் முன்பு நான் தொடராக எழுதிய 'பட்டாம்பூச்சி' (ஹென்றி ஷாரியர் எழுதிய 'பாப்பிலான்' என்ற நூலின் மொழிபெயர்ப்பு) தன்னை மிகவும் உற்சாகப்படுத்தியதாகக் குறிப்பிட்டிருந்தார்.

பதில் கடிதம் எழுதினேன். அதற்குப் பிறகு அவர் அனுப்பிய கடிதத்தில் கலைக்களஞ்சியம் பற்றி அவர் எழுப்பியுள்ள கேள்வி என் மனத்தின் ஆதங்கத்தையும் வெளிப்படுத்துவதாக அமைந்திருந்தது. ஏன் இந்தக் கலைக் களஞ்சியம் மறுபதிப்பு செய்யப்படவில்லை? இத்தனைக்கும் முழு வால்யூம்களும் வெளி வருவதற்குள்ளேயே முதல் ஐந்து பகுதிகள் விற்றுத் தீர்ந்து விட்டதாக இதன் முகவுரையில் குறிப்பிடப்பட்டுள்ளது.

# வேட்டை!

ஒரு சிரிய குழுவின் இருபத்தோரு வருட உழைப்பினால் உருவான ஒரு பொக்கிஷத்தை அலட்சியப்படுத்துவது சரி அல்ல. சமீபத்திய விவரங்களையும் இணைத்துப் புதுப்பித்தால் பலரும் பயனடைவார்களே!

இந்தக் கடிதத்தைப் படித்ததும் தூரனை நினைத்து என் மனம் கனத்துப் போனது.

தொகுப்பு: **அருண்சரண்யா**
வண்ணப்படம்: **யோகா**

# பிள்ளையார் முதலாளி; முருகன் தொழிலாளி!



'வயிரவ நாடக சபா'வில் சிரிப்பு நடிகராக இருந்தவர் முருகன். பிறகு 'வெற்றிவேல் நாடக சபா'வை 1956ல் ஆரம்பித்து, பத்து வருடங்கள் நடத்தி நொடித்துப் போயிருக்கிறார். மனோரமா, முத்துராமனுடன் எல்லாம் சேர்ந்து நடித்துள்ளார்.

1966ல் திருச்சி மாணிக்க விநாயகரைச் சரணடைந்தாராம். மனத்தில் தோன்றிய தெய்வீகப் பாடல்களை சந்நிதியில் சுயமாய்ப் பாடிக் கொண்டிருந்த சமயம் இவரது பக்தியில் மயங்கி, ஓர் அன்பர் நூறு ரூபாய் பரிசாக அளித்தாராம். இது நடந்தது 1969ல்!

உடனே, கோவில் கோபுரத்துக்கு பெயிண்ட் அடித்துக் கொண்டிருந்த நடராஜன் என்பவர் மூலம், அந்தப் பணத்தில் மாணிக்க விநாயகர் படத்தை கார்ட்போர்டில் வரைந்து கொடுக்கச் சொல்லியிருக்கிறார் முருகன்.

மாணிக்க விநாயகர் உத்ஸவ மண்டபத்தில் முதன் முதலாக மாட்டப்பட்ட படம் அதுதான்!

கோவிலுக்கு வருபவர்கள் இதைப் பார்த்து விட்டு, தாங்களும் இதே போல அன்பளிப்பு தர விரும்ப, அதுவே முருகனின் தொழிலாகி, சூடுபிடிக்க ஆரம்பித்து, நன்கு வளர்ந்து, இப்போது கைகொள்ளாத ஆர்டர்கள்!

படம் வரைந்து, கண்ணாடி பிரேம் போட்டு, கோவிலில் கொண்டு போய் சுவரில் மாட்டும் வரை இவரது பொறுப்பு!

திருச்சி மலைக்கோட்டை விநாயகருக்குப் பெருமை சேர்க்கும் வகையில் அமைந்துள்ளன ஷோடச விநாயகரின் ஓவியங்கள். (ஷோடசம் என்றால் பதினாறு) மலைக் கோட்டையின் கீழே உள்ள மாணிக்க விநாயகர் சந்நிதியின் உற்சவ மண்டபத்தை இவை அலங்கரிக்கின்றன.

இன்னும் பலப்பல படங்களும் உத்ஸவ மண்டபத்தில் காணக் கிடைக்கின்றன. அத்தனையும் முருகனின் கணேசன் கலைக்கூடத்தில் உருவானவை!

அதே கோவில் வளாகத் திலேயே செயல்பட்டுக் கொண்டிருந்த அந்தக் கலைக் கூடத்தினுள் நுழைந்தோம். சிறிய இடம்தான். ராமர், சீதையைக் கைப்பிடித்துக் கொண்டிருந்தார் கல்யாணக் கோலத்தில்!

முருகன்

வெள்ளை தாடி, மீசைக்குப் பின்புறம் ஒளிமிருந்த கண்க ளுடன் நம்மை வரவேற்றார் மா.கி. முருகன்.

ஆச்சர்யம் என்னவெனில் இன்னமும் கையில் பிரஷ் பிடித்து ஓவியம் வரையத் தெரியாதவர் முருகன். ஆனால் அவரது மேற்பார்வையில் இதுவரை ஐயாயிரத்துக்கும் மேற்பட்ட படங்கள் பல்வேறு கோயில் மண்டபங்களை அலங்கரிக்கின்றன!

மலேஷியாவில் நாகமுத்து மாரியம்மன் கோவிலில் ஆதி பராசக்தியின் அறுபது உருவங்களை அழகான ஓவியங்களாக்கித் தந்துள்ளார் முருகன்.

அவர் கையில் வைத்திருந்த கடிதம் பற்றி விசாரித்தோம். ஸ்ரீரங்கம் ரெங்கனாதசுவாமி கோவில் இணை ஆணையர்,

சென்னை சரவணபவன் ஹோட்டல் பங்குதாரர் பி. ராஜ கோபாலுக்கு எழுதிய கடிதத்தின் நகல் அது!

ஸ்ரீரங்கம் கோவில் வரலாறை முப்பது ஓவியங்களாகத் தீட்டி, கருட மண்டபத்தில் வைக்க அனுமதி அளிக்கும் கடிதம். இதன் ஓவிய வேலைகள் இவரது கலைக்கூடத்தில் தொடங்கி விட்டன.

மயிலாப்பூர் என்ற பெயர் வரக்காரணம் என்ன என்பதை கபாலீஸ்வரர் கோவிலில் ஐந்து பெரிய படங்களாய் வரைந்து மாட்டியிருக்கிறார்களாம்.

இதே போல திருச்செந்தூர், ராமேஸ்வரம், திருவானைக்கா ஸ்தல வரலாறுகளும் வரைந்து கொடுத்துள்ளார்களாம்.

வரையும் முறை பற்றியும், முதலாளியான அவரது பங்கு இதில் என்ன என்றும் முருகனிடம் கேட்டோம். "முதலாளி நான் இல்லை; இவர் தான்..." என்றார் அங்கிருந்த மாணிக்க விநாயகர் படத்தைக் காண்பித்து' தொடர்ந்து சொன்னார் :

"ஸ்தல வரலாறுகளை ஊன்றிப் படித்து, சிவாச்சாரியார்கள் மற்றும் சாஸ்திர விற்பன்னர்களுடன் கலந்தாலோசித்து, மனத்துக்குள் பதித்து, நோட்டில் பென்சில் ஸ்கெட்சாக வரைந்து கொள்வேன் அவை ஆகம, சிற்ப சாஸ்திர முறைப்படி அமைந்துள்ளதா என ஆராய்ந்து தெரிந்து கொள்வேன் பிறகு, என்னிடம் பணியாற்றும் ஓவியர்களைக் கொண்டு படம் வரைவிக்கிறேன்."

ஓவியர் மாரிமுத்து ஆயில் கலர் பெயிண்டுகள் மூலம் தீட்டிக் கொண்டிருந்த ஓவியத்தை கவனித்தபடி கேட்டோம்.

"ஏதாவது 'தொழில் ரகசியம்' இதில் உள்ளதா?"

கடையில் விற்கும் பெயிண்டுகள்தானாம். வெயில், மழையில் படாமல் வைத்திருந்தால் இரு நூறு வருடங்கள் ஆனாலும் படம் சிதிலமாகாதாம்!

பேசும்போது, அவர் சொல்லும் விஷயங்கள் அவரது ஆழ்ந்த அறிவை உணர்த்துகிறது. 63 வகை சிவன் தோற்றங்கள் இருக்கின்றனவாம். மயிலை கோவிலில் கூட இது பற்றிப் புத்தகம் உள்ளதாம். அதன் கோபுரத்தில் 63 வகை சிவதோற்றங்கள் உள்ளதாம்.

தியானஸ்லோக முறைப்படி, கஜலக்ஷ்மி, மகாலக்ஷ்மி இருவருக்கு மட்டுமே தாமரைப்பூ ஆசனமாம். அஷ்டலக்ஷ்மிகளில் மற்ற ஆறு லக்ஷ்மியர்க்கு என்ன பீடம் என்பதை ஒரு புத்தகத்திலிருந்து ஆதாரம் எடுத்துக் காட்டுகிறார்.

தனிப்பட்ட திருமணங்கள், ஹோட்டல்களுக்கும் வரைந்து கொடுக்கிறார் இவர். சென்னையிலுள்ள ஹோட்டல் சரவணபவன் கிளைகளில் மாட்டப்பட்டுள்ள முருகன் படங்கள், வாரியார் படங்கள் அனைத்தும் இவரது கலைக்கூடத்தின் கைவண்ணங்களே.

சென்னை மியூசிக் அகாடமியிலுள்ள சங்கீத மும்மூர்த்திகள் படங்களும் இவரது கைவண்ணம்தான்.

அண்ணா அறிவாலயத்திலும் இவரது படங்கள் மாட்டப்பட்டுள்ளதாம். கலைஞரின் நண்பர் மீ.சு. இளமுருகு பொற்செல்வி, மற்றும் அமைச்சர் செங்குட்டுவன் கொடுத்த ஆர்டரின் பேரில் அண்ணா, பெரியார், கலைஞர், அஞ்சுகம் அம்மையார் படங்களை வரைந்து தந்துள்ளார். ஒவ்வொரு வருடமும் கலைஞரின் பிறந்த நாளன்று இவரது ஓவியம் பரிசாக வழங்கப்படுகிறதாம்.

"உங்களின் முதலாளியான விநாயகருக்கு நீங்கள் என்ன செய்கிறீர்கள்?" என்று கேட்டோம்.

ஒவ்வொரு ஆர்டரிலும் கிடைக்கும் லாபத்தில், பத்து சதவிகிதத்தை முதலில் எடுத்து, தனி அக்கவுண்டாய் வங்கியில் வைத்திருக்கிறார். விநாயகர் சதுர்த்தியையொட்டி சிறப்பு பூஜையாக இருபத்தேழு வகையான அபிஷேகம் மாணிக்க விநாயகருக்குச் செய்து வைக்கிறாராம்! (இந்த வருடம் 28.9.96 அன்று இது நடைபெறுகிறது)




இருபத்தேழு வருடங்களாக இறைப்பணியில் ஈடுபட்டு வரும் இந்தக் கலைக்கூடத்தை, அரசாங்கம் இதுவரை கண்டுகொள்ளவேயில்லை என்பதுதான் இவரது ஒரே குறை. கோவில் நிர்வாகமும் மற்ற கமர்ஷியல் கடைகளைப் போலவே இந்தக் கலைக்கூடத்திற்கு சட்ட திட்டங்களைப் போடுகிறதாம்.

இடப்பற்றாக்குறை, வாடகை உயர்வு போன்ற பல பிரச்னைகள் நடுவிலும், இந்த கலைக்கூடம் சுறுசுறுப்பாக இயங்கிக் கொண்டிருக்கிறது!

திருச்சியிலிருந்து : **கிருஷ்ணா**

வாசகர் யோசனை : **ஆர். மணிராவ்**

# போட்டிக் கதை – 5

## ந. ஜெயபாலன்

இரண்டு நாட்கள் கழித்து ஆர்.சி. போட இருந்த அந்த இடத்தில் பலகைகளை எடுத்து அடுக்கி, ஆணிவைத்து அறைந்து கொண்டிருந்தான் பதினேழு வயது பெருமாள்.

ஆணியின் கொண்டையில் சுத்தியலை ஓங்கி அடித்த அதே நேரம், நச்சென்று ஒரு குட்டு அவன் தலையில் விழுந்தது.

"ஏண்டா நாயி. இந்த சந்தில போய் இத்த னூண்டு பலகையை வைச்சா எப்படிடா? சோறு தானே திங்கிறே? பன்னி! அறிவுகெட்ட முண்டம்! முக்காலுக்கு நாலு சைஸ்ல ஒரு துண்டுப் பலகையை எடுத்து இங்கே ஜாயிண்டு குடுத்திட்டு, அந்தப் பக்கம் ஆறடிப் பலகையை எடுத்து வைடா மூதேவி. ஏழு வருஷமா வேலை பழகற.." என்று இரைந்தபடி அந்த முக்காலுக்கு நாலு சைஸ் பலகையை எடுத்து அவனைச் சாத்துவது போல் நீட்டினான் காண்ட்ராக்டர் முருகன்.

கான்கிரீட் போட்ட மறுநாள், பெருமாளும் காண்ட்ராக்டர் முருகனும் பக்கவாட்டுப் பலகையை மட்டும் பிரித்துக் கொண்டிருந்தனர்.

பெருமாளுக்கு மனசுக்குள் ஒரு குறுகுறுப்பு, எப்படியாவது அதைக் கேட்டுவிட வேண்டும் என்று. இன்று கேட்போமா, நாளை கேட்போமா என்று குழம்பிய பெருமாள், பயந்து பயந்து வாயைத் திறந்தான்.

"அண்ணே, நீங்க இந்த வருஷம் ஐயப்பனுக்கு மாலை போடணும்னீங்களே.. போடலியா?"

சுர்ரென்று பாய்ந்தான் முருகன்.

"ஏ விளக்கெண்ணெய்! உன் வேலையைப் பாரு விளக்கெண்ணெய்! நான் போறேன்; சும்மா கூட இருக்கேன்; உனக்கென்னடா அதுப்பத்தி..? முண்டம்!"

பெருமாள் விடவில்லை.

"போன வாரம் போடணும்னீங்களே.. அதான் ஞாபகப்படுத்தினேன்."

"ஏ, வெங்காயம். நொச்சு நொச்சுன்னு பேசாதடா வெங்காயம். வெறும் வாயிலே முழம் போட முடியுமா? வெள்ளையப்பன் வேணுமில்லே... மாலை போடறதுக்கு மட்டும் ஐந்நூறு ரூபாய் செலவாகும். நீ குடுக்கிறயாடா காரியக்கார நாயி..!"

பற்களைக் கடித்தான் முருகன்.

"தரேண்ணே.."

"புழுகினிக் கருப்பா. வாய்ச் சவடால் அடிக்காம வேலையைப் பாருடா. நீ குடுத்து நான் ஐயப்பனுக்கு மாலை போடவாக்கும்!" என்று விரட்டினான்.

சில விநாடிகளில் –

"இந்தாங்க அண்ணே.."

நான்காக மடித்த ஐந்து நூறு ரூபாய் நோட்டுக்களை எடுத்து நீட்டினான் பெருமாள்.

நிமிர்ந்து பார்த்த முருகனின் கண்கள் விரிந்தன. திகைத்து விழித்து, "ஓங்கொப்பனை ஓதைக்கிற பயலே! ஏண்டா சுத்தி வளைச்சுப் பேசுற? பணம் வச்சிருந்தா படக்கின்னு குடுக்க வேண்டியது தானேடா. ஈனா வானா.." என்று கூறிக் கொண்டே பணத்தை வாங்கிக் கண்களில் ஒற்றிக் கொண்டான்.

நான்கு நாட்களாயிற்று.

ஒரு கட்டடத்தில் லாஃப்ட்களுக்கு பலகையைச் சேர்த்து வைத்து தயார் செய்து கொண்டிருந்தான் பெருமாள்.

அடுத்தப் பக்கத்தில் வேலை செய்து கொண்டிருந்த காண்டிராக்டர் முருகன் கத்தினான்.

"ஏ சாமி! பெருமாள் சாமி! என்ன சாமி இது. இங்கே ஒரு முட்டுக் குடுக்க வேணாமா? கலவையைத் தூக்கிக் கொட்டும்போது டபக்கின்னு சரிஞ்சிடுமே சாமி. கொஞ்சம் முன்னப் பின்ன யோசிச்சு செய்யுங்க சாமி.." என்றவன், தொடர்ந்து அடுத்த பக்கத்தைப் பார்த்துக் கத்தினான். "ஏ பாண்டி சாமி! அது கிடக்கட்டும். இங்கே வந்து பெருமாள் சாமி கூட வேலையைக் கவனிங்க சாமி. நான் போய் விரதம் விடறேன்.."

பெருமாள் தனக்குள் சிரித்துக் கொண்டான். அவன் சந்தோஷப்பட்டான் என்பதும் அவன் முகத்தில் பிரதிபலித்தது.

ஏனென்றால் –

வாயைத் திறந்தால் இன்ன வார்த்தைதான்



வரும் என்று சொல்ல முடியாதபடி பேசி வேலை வாங்குகிற முருகன், ஐயப்பனுக்கு மாலை போட்டு விட்டதால், 'சாமி' என்ற சொல்லைத் தவிர வேறு சொல்லைப் பயன்படுத்த மாட்டான்; கிட்டத்தட்ட இரண்டு மாதங்களுக்கு!

பெருமாள் கொடுத்திருந்த பணத்திற்கு அந்த சுகமும் அந்த அற்ப சந்தோஷமும்தான் அவனுக்குக் கிடைக்கிற வட்டி.



# வெண்டீ

## பணம் சேமிக்க வெண்டீ! எப்போதும் இதற்கே வெற்றி!

சுதா உமா இருவரும் பள்ளித் தோழிகள் ஒரு நாள் வீடு திரும்பும் போது...
































"மூப்பனாரை முதலமைச்சராக்க '89 தேர்தலின் போது ராஜீவ் காந்தி விரும்பினார். என்னுடைய பாபுலாரிட்டியை வைத்துக் கொண்டு அவரை எதற்கு முதல்வர் ஆக்குவது? என்று ராஜீவிடம் மறுத்து விட்டேன். அதனால் மூப்பனாருக்கு என் மீது கோபம். ப. சிதம்பரம், ஒருவரைத் தூது அனுப்பினார். அ.தி.மு.க.வுக்கும் காங்கிரசுக்கும் சமமாகச் சீட்டுக்களைப் பிரித்துக் கொடுப்பதாய் இருந்தால், அவர் முதல்வராகி, என்னைத் துணை முதல்வராக ஆக்குவதாகச் சொன்னார். அதைக் கேட்டு நான் விழுந்து விழுந்து சிரித்தேன். சிரித்து முடித்தவுடன் அந்தத் தூதரிடம், **'get lost'** என்று சத்தம் போட்டேன்."

# பேரவைக் கூட்டத்தில் நீ சிரித்தால்..!

- இப்படி 'சண்டே' இதழுக்கு ஜெயலலிதா அளித்திருக்கும் பேட்டியைப் படித்தபின், இன்னும் பல பத்திரிகைகள் அவரிடம் இது மாதிரி 'சுவாரசியமான' பேட்டிக்கு அணுகுவது நிச்சயம். ஜெ பாவம், மிகவும் கஷ்டப்படுவார். அவருக்கு உதவும் ஒரே நோக்கத்தோடு இதோ சுவாரசியமான சில பகுதிகளை உருவாக்கிக் கொடுத்திருக்கிறோம். பயன்படுத்திக் கொள்ளுவதும், கொள்ளாததும் ஜெயின் விருப்பம்!



**நிருபர்:** நீங்கள் அ.தி.மு.க.வில் சேருவதற்கு முன்னாலேயே அரசியலுக்கு வந்து விட்டீர்களா?

**ஜெயலலிதா :** ஆமாம். என் தாயார் சந்தியா, நேரு காலத்திலேயே காங்கிரசில் சேர்ந்து படாத பாடுபட்டிருக்கிறார். என் தாயாரைப் பார்த்து நேரு, "சினிமா எல்லாம் போதும். உன்னை ஐ.நா. சபைக்குத் தலைவராக அனுப்புவதாக இருக்கிறேன்!" என்றார். அம்மா ஒரேயடியாக மறுத்து விட்டதால்தான், விஜயலட்சுமி பண்டிட்டை அனுப்பினார் நேரு. அப்போது கூட ஐ.நா. சபையை எப்படி நடத்துவது என்று எனக்குத் தெரியாது என்று பயந்தார் விஜயலட்சுமி பண்டிட். அப்புறம் நேரு என்னைக் கூப்பிட்டு, 'நீதான் கெட்டிக்காரி ஆச்சே, விஜயலட்சுமி பண்டிட்டுக்கு எல்லாம் சொல்லிக் கொடு' என்றார். நானும் போனால் போகட்டும் என்று எல்லாம் சொல்லிக் கொடுத்தேன்.

**நிருபர் :** எம்.ஜி.ஆர். இங்கே முதல்வராக இருந்தபோது அங்கே இந்திரா காந்தி பிரதமராக இருந்தார்...

**ஜெ :** ஆமாம். அப்போது தமிழ் நாட்டுக்கு என்னைத்தான் கவர்னராகப் போட வேண்டும் என்று அவரிடம் எம்.ஜி.ஆர். சொல்லி விட்டார். நான் சிரித்தேன். ஒரு மணி, நாற்பது நிமிஷம் விடாமல் சிரித்தேன். சிரித்து முடித்து விட்டு மறுபடியும் சிரிக்க ஆரம்பிப்பதற்குள், எம்.ஜி.ஆர். 'ஏன் சிரிக்கிறாய்?' என்று கேட்டார். 'கவர்னர் பதவி வெறும் அலங்காரப் பதவி. அதனால் மக்களுக்கு ஒரு பலனும்

கிடையாது' என்று சொன்னேன். முதல்வராக வந்து மக்களுக்கு நிறைய சேவை செய்வேன். ஒரே ஒரு ரூபாய் சம்பளம் வாங்கிக் கொண்டு மக்களுக்காக உழையோ உழை என்று உழைப் பேன்' என்றேன். எம்.ஜி.ஆருக்கு ஒன்றும் புரிய வில்லை. 'ஒரு ரூபாயை வைத்துக் கொண்டு லாலிபாப் கூட வாங்க முடியாது. ரொம்பக் கஷ்டப்படுவாய்!' என்றார்.

*திருபர் : உண்மைதானே? ஒரு போஸ்ட் கவர் வாங்கினாலே ஒரு ரூபாய் தீர்ந்து விடுமே?*

ஜெ : சம்பளம் மட்டும்தான் ஒரு ரூபாய் என்று சொன்னேன். மற்றபடி எல்லாம் பிறந்த நாள் விழா, கான்ட்ராக்ட் என்று நிறைய சான்ஸ் இல்லையா? என்று கேட்டேன். 'எல்லாரும் என்னைப் பார்க்க வரும்போது, என்னை எதுவும் கேட்காமலே, என்னிடம் காண்பிக்காமலே டயமண்ட், கோல்டு, கரன்சி எல்லாம் வைத்துவிட்டுப் போய் விடுவார்கள். சில பேர் அமெரிக்கா போனதும் விருது அனுப்புகிறேன் என்பார்கள். சிலர் லட்சக் கணக்கில் டாலர் அனுப்புவார்கள். ஏதோ அதை எல்லாம் வைத்துக் கொண்டு ஒரு மாதிரி காலத்தைத் தள்ளிவிட முடியாதா?' என்றேன்.

*திருபர் : எம்.ஜி.ஆர். நம்பினாரா?*

ஜெ : அவருக்குக் கவலையாகத்தான் இருந்தது.

*திருபர் : அமெரிக்கா என்றதும் நினைவு வருகிறது. கிளின்டன் உங்களைக் கூப்பிட வில்லையா?*

ஜெ : கிளின்டன் கூப்பிட்டாரே! நான் ரொம்ப நேரம் சிரித்தேன். விழுந்து விழுந்து சிரித்தேன். சிரித்து முடித்தபின் 'கோ டு ஹெல்!' என்றேன். ஜனாதிபதி பதவி அங்கே அதிகபட்சம் பத்து வருஷம்தான். இங்கே மாதிரி 'நிரந்தர முதல்வர்' ஆக முடியுமா? ஒரு கட்-அவுட் வைக்க முடியுமா? ஆறடிக்கு ஆறடி போஸ்டர் ஒட்ட முடியுமா? ஹிலாரி கிளின் டனை ரகசியமாகத் தூது அனுப்பினார். என் னால் முடியவே முடியாது என்று அடித்துச் சொல்லி விட்டேன்.

*திருபர் : டி.என். சேஷன் தம்மை ஜனாதி பதியாக்க வேண்டுமென்று உங்களிடம் கேட் டார் இல்லையா?*

ஜெ : கெஞ்சி கெஞ்சிக் கேட்டார். நான் தான் அதற்குச் சம்மதிக்கவில்லை. அதனால் ஆபத்து வந்துவிடும் என்றுதான் அப்படிச் செய்தேன்.

*திருபர் : ஆபத்தா? சேஷனாலா?*

ஜெ : ஆமாம். அவர் சுப்பிரமணியம் சுவாமியோடு சேர்ந்து கொண்டு ஆட்டம் போட்டார். சுவாமி எப்படிப்பட்டவர் என்று தெரியாதா? நம்பவே முடியாத ஆளல்லவா அவர்? அவரோடு கொஞ்சிக் குலாவுவது பெரிய ஆபத்தில்லையா? எப்படி அவரை ஜனாதிபதி ஆக்குவது?

*திருபர் : இப்போது நீங்கள் சுப்பிரமணியம் சுவாமியின் கட்சியை ஆதரிக்கிறீர்களே?*

ஜெ : சுவாமியை ஆதரிக்கவில்லை. சந்திர லேகாவுக்கு ஆதரவு கொடுக்கிறேன். அவ்வளவுதான்.

*திருபர் : அவர் மீது நீங்கள்தான் ஆஸிட் ஊற்றச் சொன்னதாக சுர்லா வாக்குமூலம் கொடுத்திருக்கிறானே?*

ஜெ:ஆஸிட் ஊற்றச் சொன்னது நான் இல்லை. கருணாநிதி! சுர்லாவும் கருணாநிதியும் மூணாங்கிளாஸ் வரை ஒன்றாகப் படித்த வர்கள் என்ற ரகசியச் செய்தி எனக்கு வந் திருக்கிறது. கருணாநிதிதான் தம் நண்பர் சுர்லா மூலம் ஆஸிட் வீச வைத்து விட்டுப் பழியை என் மீது போடச் சொல்லியிருக் கிறார். சமீபத்தில் இந்த விஷயம் சந்திரலே காவுக்கும் தெரிந்து விட்டதால்தான், என் ஆதரவை அவர் ஏற்றுக் கொண்டு விட்டார். இனி நாங்கள் இணைந்து போராடுவோம். இல்லையென்றால் குடும்ப ஆட்சி வந்துவிடும்!

*திருபர் : சசிகலா குடும்ப ஆட்சி மாதிரியா?*

ஜெ : நீங்கள் கருணாநிதி அனுப்பிய ஆள்! உங்களுக்குப் பேட்டி கொடுத்ததே தவறு! நான் சொன்னது அவ்வளவும் கப்஬ஸா என்று நாளையே அறிக்கை விட்டு விடுகிறேன். ஹஹ்ஹா! ஹஹ்ஹா!

கற்பனை : **சாருகேசி**

---



"முன்னாள் அமைச்சருக்கு இரட்டை குழந்தை பிறந்திருக்கு. என்ன பெயர் வைக்கலாம்?"
"ஜாமின்–முன்ஜாமின்'னு வைக்கச் சொல்லு!"
– பி.ஆர். மஹேந்திரநாத்ராவ்

# சுலபத் தவணையில் சொந்த வீடு

**காசி குரூப் ஹவுசிங் பெனிபிட் ஸ்கீம்**

ரூ.1,650/- முதல் ரூ. 10,000/- வரை மாதத் தவணைகளாக செலுத்தி குலுக்கல் மூலம் 300 முதல் 1,000 சதுர அடிகள் வரையிலுள்ள வீட்டினை தேர்ந்தெடுத்து சொந்த வீடாக்கிக் கொள்ளலாம். மீதித் தொகையை வாடகை போல் வீட்டில் இருந்து கொண்டே செலுத்தலாம்.

## சரஸ்வதி பூஜை சிறப்பு சலுகை

**"அதிர்ஷ்டம் உங்கள் வீடு தேடி வருகிறது"**

*சரஸ்வதி பூஜையை முன்னிட்டு சிறப்பு சலுகையாக ரூபாய் 1 லட்சம் மதிப்புள்ள பரிசுக் கூப்பனை பெற்றுச் செல்வீர்! இந்த பொன்னான அரிய வாய்ப்பினை நழுவவிடாதீர்!!*

**வீடு கிடைக்கும் இடங்கள்**

**சென்னை** : கே.கே. நகர் மேற்கு, சைதாப்பேட்டை மேற்கு மாம்பலம், அசோக் நகர், விருகம்பாக்கம், வளசரவாக்கம், சாலி கிராமம், வடபழனி, போரூர், அம்பத்தூர், வேளச்சேரி, ராமாபுரம், பல்லாவரம், மடிப்பாக்கம்.

**திருச்சி** : ஸ்ரீரங்கம், திருவெறும்பூர், கே.கே. நகர், கிராஃபோர்டு, டி.வி.எஸ். டோல்கேட், மன்னார்புரம் மற்றும் பிரதான இடங்களில்.

**மதுரை** : எல்லீஸ் நகர், ரூபா பங்களா, அழகப்பா நகர், கோமதிபுரம் மற்றும் பல இடங்களில்.

**கோவை** : வடவள்ளி, இராமநாதபுரம், பீளமேடு, கணபதி, தெலுங்குபாளையம்.

**பெங்களூர்** : விஜய நகர், பஸ்வேஷ்வர் நகர், மஹாலக்ஷ்மி லே அவுட், மல்லேஸ்வரம் மற்றும் பல இடங்களில்.

எங்களின் ஏதாவது ஒரு கிளைக்கு வைப்பு நிதி, வீட்டு வசதி திட்டம் மற்றும் காசி ஸ்கீம்ஸ் பற்றி விபரம் அறிந்து கொள்ள நேரில் வருகை தருபவர்களுக்கு ஒரு பரிசுக் கூப்பனும் மற்றும் எங்களது ஏதாவது ஒரு திட்டத்தில் சேருபவர்களுக்கு அத்திட்டத்திற்கு ஏற்ப பரிசுக் கூப்பன்கள் வழங்கப்படும்.

**27.10.96**க்குள் வீடு பதிவுசெய்பவர்களுக்கு முதல் இரண்டு மாத தவணையில் **50%** சிறப்பு தள்ளுபடி வழங்கப்படும்.

எங்களிடம் வைப்பு நிதிக்கு **18%** முதல் **27%** வரை வட்டி **+ 1** கிராம் தங்க நாணயம் **+1%** ஊக்கத் தொகை வழங்கப்படும்.

குறைந்த பட்ச முதலீடு ரூ. 10,000/- அதற்கு மேல் ரூ.1,000/- மடங்குகளில் தங்க நாணய சலுகை ஒரு வருடத்திற்கு மேல் வைப்பு நிதி செய்பவர்களுக்கு மட்டுமே

**முக்கிய அறிவிப்பு! விலை உயர்வு!!**

27.10.96 முதல் ஒரு சதுர அடியின் விலை கீழ்கண்டவாறு உயரஉள்ளது

| | | |
|---|---|---|
| சென்னை : | ரூ. **600** - | ரூ. **700** |
| பெங்களூர் : | ரூ.**1000** - | ரூ.**1200** |

விலை உயர்வு 27.10.96 முதல் அமுலுக்கு வருவதால் உடன் பதிவு செய்து பயனடையுமாறு கேட்டுக் கொள்கிறோம்.

**காசி குரூப் ஹவுசிங் ஸ்கீமின் வெற்றிகரமான 20வது குலுக்கல் 27.10.96 அன்று சென்னை காமராஜர் மெமோரியல் ஹாலில் நடைபெற உள்ளது.**

KGC **காசி ஹவுசிங் & டெவலப்மெண்ட் லிமிடெட்.**
**காசி பைனான்ஸ் & இன்வெஸ்ட்மெண்ட்ஸ்.**

**தலைமை அலுவலகம்**: 91-92, நுங்கம்பாக்கம் தெரு சாலை, காசி நிலேட்டர் காம்ப்ளக்ஸ், அசோக் நகர், சென்னை - 600 083. ✆ 4822205, 4825506, 4821969, 4896409, 4896373, பேக்ஸ் : 044-4825606. **கிளைகள் : (சென்னை) சைதாப்பேட்டை** : 13, கிழக்கு ஜோன்ஸ் ரோடு, சைதாப்பேட்டை, சென்னை - 600 015. ✆ 458464 **மயிலாப்பூர்** : 140, முதல் மாடி, கதவு எண் 19, சாந்தி விஹார் காம்ப்ளெக்ஸ், ராயப்பேட்டை ஹைரோடு, மயிலாப்பூர், சென்னை - 600 004. **திருவான்மியூர்** : கதவு எண் 10, சிவம் ஆர்கேடு, எண் 64, எல்.பி. ரோடு, திருவான்மியூர், சென்னை - 600 041. **அம்பத்தூர்** : எண் 11, சபுதிரி பில்டிங், எம்.டி.எச். ரோடு, அம்பத்தூர், சென்னை - 600 053. ✆ 682592 **மடிப்பாக்கம்** : நெ.5 ஜெ.ஜி. காம்ப்ளெக்ஸ் வேளச்சேரி மெயின் ரோடு மடிப்பாக்கம் கூட் ரோடு அருகில் மடிப்பாக்கம் - 600 091. **திருத்தணி** : முட்டம் காசி இண்டஸ்ட்ரீஸ் காம்ப்ளக்ஸ், திருத்தணி-திருப்பதி நெடுஞ்சாலை, பொன்பாடி ரயில் நிலையம் திருத்தணி -631 213. ✆ 88304. **திருச்சி** ; 5/B, 25, ஜெமினி பிளாசா, 5, பாரதியார் சாலை கண்டோன்மெண்ட், திருச்சி - 620 001 ✆ 466003. 32/B, 3வது மாடி, வில்லியம்ஸ் ரோடு, டாப் (TAB) காம்ப்ளக்ஸ், கண்டோன்மெண்ட், திருச்சி - 620 001. ✆ 466002. **கோவை** : ஷ்ரீ டவர்ஸ், 594/4, டி.பி. ரோடு, ஆர்.எஸ்.புரம், கோயம்புத்தூர்-641 002. ✆ 439656. ஸ்ரீ்க்வி பிஸ்ஸ காம்ப்ளெக்ஸ், 209/8, 9வது கிராஸ், முதல் மாடி, காந்திபுரம், கோவை-641 012. **மதுரை** : 246/A, நாயக்கர் புதுத் தெரு, சக்தி சிவம் தியேட்டர் அருகில் மதுரை - 625 001. ✆ 74190. பெங்களூர் ; 33, 2வது மாடி, கார்ப்பரேஷன் நம்பர் 400, முனிசிபல் காம்ப்ளக்ஸ், சம்பைக் ரோடு, 9வது குறுக்கு தெரு அருகில் மல்லேஸ்வரம்-3. ✆ 3363351. 1632, 26வது மெயின், 9 வது பிளாக், பெயின் பேசுசி மாடியில், ஜெயநகர், பெங்களூர்-560041. ✆ 6632480. மைசூர் : 20, முதல் மாடி, தேவராஜ் அர்ஸ் சாலை, மைசூர் 570 001. ✆ 435997 குண்டூர் : 4-8-14 மெயின் ரோடு, கொரிட்டிபாடு, குண்டூர் 522007. ✆ 355257 மும்பாய் எண் 203 ஆ. ஸ்ரீராம் தர்ஷன் பீத்துகளில் பலா கொட்டாய்க் எதிரில் சியான் மெயின் ரோடு, சியான் மேற்கு மும்பாய் 22. ✆ 4082549 DUBAI : NADA AL ZUHOOR TRADING EST. P.BOX No. 27857 DUBAI : UAE TEL. 247970 INTERCODE 00971/40 FAX : 247980

☒ செப்டம்பர் 15-ம் தேதி 419 ஆயுள் கைதிகள் விடுவிக்கப்படவிருப்பதை எல்லா தரப்பினருமே பாராட்டிக் கொண்டிருக்க, 'செம்பியன்' மட்டும் அதனால் ஏற்படும் பிரச்னைகளை அலசி ஆராய்ந்திருப்பது பாராட்டுதலுக்குரியதே!

மணியம்பட்டு, வ. திருநாவுக்கரசு.

# த்ரீ லெட்!

☒ இதே ஜெயலலிதா பதவி வந்த புதிதில் ஒரு பேட்டியில் "கல்கியை நான் படிப்பதில்லை. அது ஓய்வு பெற்றவர்கள் வாசிக்கும் பத்திரிகை" என்று கூறியிருந்தார். இன்று அதே ஜெயலலிதா கல்கியில் வரும் விமர்சனங்களுக்கு பதில் எழுதிக் கொண்டிருக்கிறார்!

அரியலூர், மணிவண்ணன்.

☒ தமது அமைச்சரவையை முற்றிலும் கொள்ளையர்களின் கூடாரமாய் மாற்றிய புண்ணியவதி ஜெயலலிதாவின் பேச்சை - அவர் சாடினாலும் சரி, இல்லை, பாடினாலும் சரி - மக்கள் நம்புவதற்கு இனித் தயாராக இல்லை.

திருக்கோவிலூர், ஆர். சுப்பராவ்.

கொண்ட எம்.எஸ்-சதாசிவம் அவர்கள் பல்லாண்டு வாழ இறைவனை வேண்டுகிறேன்.

தஞ்சாவூர், வி. வனஜா.

('ஒரு சுந்தரமான இல்லறம்' கட்டுரையில், 'ஒன்றரை மாதம் கடுங்காவல் தண்டனை' முடிந்த கையோடு சதாசிவம் நாக்பூர் போராட்டத்துக்கு அழைக்கப்பட்டார்' என்று வெளியாகிவிட்டது. ஒன்றேகால் வருட கடுங்காவல் தண்டனை அது..! தவறுக்கு வருந்துகிறோம்.

– ஆர்.)

☒ 'கல்கி'யைச் சாடிய ஜெயின் மறுப்புக் கடிதத்தைப் படித்தேன். ரசித்தேன். சிரித்தேன். சிரித்தது அவர் மேல் தவறில்லை என்று சொன்னதையும், கருங்காலிகள் செய்து விட்ட தவறுகள்தான் என்று சொன்னதையும் படித்த பிறகு. ரசித்தது, உடன் பத்திரிகைகளை மதித்து மறுப்பு எழுதிய வேகத்தை, பண்பை. இவற்றை இவர் ஆட்சியிலிருந்தபோதே கடைப்பிடித்திருக்கலாம்.

மதுரை, வி.பி. காந்திமதி.

☒ இப்போதாவது ஜெயலலிதா தன்னிலை விளக்கங்கள் கொடுக்கத் துவங்கியது வரவேற்க வேண்டிய விஷயமே. எனினும் ஆணவத்தாலும் முன்கோபத்தாலும் கடந்த ஐந்து ஆண்டுகளாக மக்களிடமிருந்து மிக மிக விலகி இருந்து விட்டு, இப்போது விளக்கங்களும், மறுப்பு அறிக்கைகளும் தருவதும், பத்திரிகைகளை திடீரென 'கவனிக்கத் துவங்கியதும் 'த்ரீ

☒ இரண்டாவது சுற்றுப் பேச்சு வார்த்தையும் வெறும் ஜரிகைக் குல்லாவுடன் முடிந்து விட்டதென்பதைக் கார்ட்டூன் மூலமாகவும், தமிழகம் கர்நாடகத்திலிருந்து பெறவிருக்கும் தண்ணீரின் அளவு குறித்து உருப்படியான விவரம் ஏதும் கூட்டறிக்கையில் இல்லையென்பதைத் தலையங்கத்திலும் ஆணித்தரமாகச் சாடியுள்ளீர்கள். ஆக்கபூர்வமான சாதனைகட்கு மட்டுமே கைகுலுக்கல்கள்; விளைவற்ற வெற்றுப் பேச்சுப் பரிமாறல்களுக்கு இடித்துரைகள் நிச்சயம் உண்டென்பதை முதல்வருக்கு ஐயந்திரிபறத் தெளிவுபடுத்தியுள்ளீர்கள்.

மதுரை – 14, கோமதி மணாளன்.

☒ "இன்னமும் கச்சேரின்னா எனக்கு பயம்தான்" என்று சங்கீத சமுத்திரமான எம்.எஸ். கூறுவது அவரின் எல்லையற்ற அடக்கத்தைக் காட்டுகிறது. தேசத் தொண்டும், தெய்வபக்தியும், நல்ல எண்ணங்களும்

☒ யோகா அவர்களே, நீங்கள் எப்படி இப்படி ஒரு அற்புத வண்ணப்படத்தை எடுத்தீர்கள்? என்ன களை, என்ன dignity! எல்லாவற்றிற்கும் மேல் என்ன ஒரு பேரானந்தம்! நாளை காலை அட்டைப் படத்தை லாமினேட் செய்து வாங்குவதுதான் மறு வேலை.

பம்பாய், மங்களவல்லி.

☒ "ஒரு சுந்தரமான இல்லறம்" படித்தேன்; இன்புற்றேன். எனது தந்தை கப்பலோட்டிய தமிழர், வ.உ.சி. அவர்கள், 1872 ஆவணி ஹஸ்த நட்சத்திரத்தில் பிறந்து, 5.9.96ல் அவர் பிறந்து 124 ஆண்டுகள் பூர்த்தியாகியது. 30 ஆண்டுகள் கழித்து அதே ஆவணி ஹஸ்தத்தில் பெரியவர் சதாசிவம் அவர்கள் பிறந்து 94 வயது நிறைவு பெறுகிறார் என்றறிய மிக்க மகிழ்ச்சியாக உள்ளது. இவ்வினிய தம்பதிகள் இன்னும் பல்லாண்டு நல்ல உடல்நலத்துடன் வாழ

இறைவன் அருள் செய்வாராகுக!
திண்டுக்கல், வ.உ.சி. வாலேஸ்வரன்.

✉ பிரபஞ்சனின் குமுறல் நியாயம்தான். நடிகர்களும் சாமானியர்கள்தான்; தெய்வங்கள் அல்ல, என்ற மனோபாவம் மக்களுக்கு என்று ஏற்படுகிறதோ, அப்போதுதான் நமது நாடும் உலக அளவில் ஓர் உன்னத நிலையை அடைய முடியும்!
நாமக்கல், வி. ராமகிருஷ்ணன்.

✉ கீதையைக் கண்ணன் உரைத்ததாக திவ்வியப்பிரபந்தத்தில் வரவில்லை என்று சுஜாதா கூறுகிறார். திருமழிசையாழ்வார் அருளிச் செய்த நான்முகன் திருவந்தாதியில் 71வது பாசுரம் : "சேயன் அணியன் சிறியன மிகப் பெரியன் ஆயன் துவரைக்கோனாய்

## நியாயமான இரை!

நின்ற – மாயன் அன்றோதிய வாக்கதனைக் கல்லார் உலகத்தில் ஏதிலராய் மெய்ஞ்ஞானமில்."
–இதில் அன்றோதிய வாக்கு என்பது கீதை யைத்தானே குறிக்கிறது?
சென்னை – 91, சுகன்யா ராஜகோபாலன்.

### ரூ. 20/- பரிசு பெறும் கடிதம்

✉ பொலிகாளை – நாய்கள் கதை சொன்ன பிரதமரின் நாலாந்தரப் பேச்சைத் தாங்கள் கண்டித்திருப்பது முற்றிலும் நியாயம்தான். ஆனால், ஒரு பிரதமரை எதிர்க்குமளவு மக்களிடையே செல்வாக்குப் பெற்ற, நீண்ட காலமாக அரசியலில் இருந்து, பல பதவிகள் வகித்த, மூத்த தலைவரான ஹெக்டே, 'மிச்சமிருக்கும் எச்சில் சோற்றுக்கு அலைகிற நாய்கள்' என்றும், 'ஆண்மையில்லா அயோக்கியர்கள்' என்றும் தம் பேச்சில், எதிரணியினரைத் தாக்குவது அநாகரிகமன்றோ? அதையும் நடுநிலையுடன் தாங்கள் கண்டிக்காமல் விட்டது அநியாயமன்றோ? பிரதமரின் பேச்சு தலைகுனிய வைத்தது; ஹெக்டேவின் பேச்சு தலையிலடித்துக் கொள்ள வைத்தது.... மொத்தத்தில் நம் தலைவிதியை நினைத்தால் 'ஐயோ, பாவம்' எனத் தோன்றுகிறது!
சென்னை – 43, வி. பிரசன்னகிருஷ்ணன்.

✉ 'ஆக்ஸிடோஸின்' போட்டுப் பால் கறக்கும் முறை எங்கள் ஊரில் இன்னும் வரவில்லை; நாங்கள் தப்பித்துக் கொண்டோம்; இம்முறை பரவலாகப் பரவாமலிருக்க அரசாங்கம் ஈடுபாட்டுடன் நடவடிக்கை எடுக்க வேண்டும்!
மேலகிருஷ்ணன்புதூர், ஆர்.கே. லிங்கேசன்.

✉ ஜாலிப்போட்டி வைத்து எங்களை மண்டைகாய வைத்துக் கொண்டிருக்கிறீரே..! அந்த ஐயாயிரத்தைப் பத்து பேருக்கு ஐநூறு, ஐநூறாக்கிக் கொடுத்தால்தான் என்ன?
திருக்கோவிலூர், பழங்கூர்மீரா – முருகன்.

லேட்!
மயிலாடுதுறை, டி.எஸ். திருமலைராயன்.

✉ இன்று தம்மைப் பற்றியும் தமது சகாக்கள் ஒவ்வொருவரைப் பற்றியும் செய்திகள் வெளியிடும் பத்திரிகைகளுக்குத் தேடித் தேடி பதில் தரும் மனோபாவம், அன்று டான்சி நில பேர விவகாரம் பற்றிய, மற்றும் நிலக்கரி ஊழல் தொடர்பான செய்திகட்கும் மறுப்பளித்து உண்மை நிலையை வெளிப்படுத்தியிருக்கலாமே? தாமே நிரந்தர முதல்வர்; தம்மை அசைக்க எவராலும் முடியாதென இருந்து விட்டார் போலும்! தாம் கம்பிக்குப் பின்னால் செல்லவேண்டிய அவசியம் வராது எனக்குறிப்பிடும் அதே ஜெயலலிதா, தம்மைக் கைது செய்யாமலிருக்க ஜாமீன் பெறுவது தமது சட்டரீதியான உரிமை எனக் குறிப்பிட்டுள்ளார். யார் காதில் பூ? தப்பு செய்தவன் திருந்தி ஆகணும், தவறு செய்தவன் வருந்தி ஆகணும். ஜெ. உணருவாரா?
கிருஷ்ணகிரி, ஆர்.எம். இராமன்.

✉ ஆட்சியிலிருக்கும்போது சுட்டிக்காட்டிய தவறுகளைத் திருத்திக் கொள்ளவோ, அதற்கு விளக்கமளிக்கவோ முன்வராத ஜெயலலிதா, இப்போது செய்யப்படும் விமர்சனங்களைக் கண்டு, பொங்கி எழுவது அவரின் அரசியல் பக்குவமின்மையைக் காட்டுகிறது. தமது செயல்பாடுகளைத் திருத்திக் கொள்வதன் மூலம் பத்திரிகைகள், மக்களின் நம்பிக்கையைப் பெற முயற்சிக்காமல், இப்படி பத்திரிகைகள் மீது எரிந்து விழுவது எந்தப் பலனையும் தராது. கல்கி, "ஒருசிலரைத் தலையில் தூக்கி வைத்துக் கொண்டு ஆடுவதாக" தமது கடிதத்தில் குறிப்பிட்டுள்ள ஜெயலலிதா, காவிரிப் பேச்சு வார்த்தை தொடர்பாக எழுதப்பட்டிருந்த தலையங்கங்களைப் படிக்கவில்லை போலும்...! அவரின் கடிதத்திலிருந்த ஒரே ஆறுதல் தரும் விஷயம், சந்தேகங்கள் இருப்பின், அவரைத் தொடர்பு கொள்ளச் சொல்லியிருந்ததுதான்.
கள்ளிப்பாடி, கே. ஸ்டாலின்.

# மதனின் அனுபவம் தராசுக்கு ஏற்பட்டால்..?

• சிக்கல்

● வி. முத்தையா, திருநெல்வேலி.

*? யார், யாருடன் தொடர்பு வைத்தா லென்ன...? தனிப்பட்ட அந்தரங்க வாழ்க் கையில் தலையிடுவது பத்திரிகை தர்மமா?*

! ஒருவருடைய தனிப்பட்ட வாழ்க்கை, பொது வான ஆதாரப் பண்புகளுக்கு உட்படாமல் இருக்குமானால், அதனால் பொது வாழ்க் கைக்கு ஊறுவிளையுமானால் நிச்சயமாக பத்திரிகைகள் கட்டிக்காட்டலாம்.

● ஸ்ரீவித்யா காளிதாஸ், சிதம்பரம்.

*? உள்ளாட்சித் தேர்தலில் ஒரு இடம் கிடைத் தாலும் எங்களுக்கு வெற்றியே என வை.கோ கூறியுள்ளாரே?*

! பாவம்! எப்படிப்பட்ட பரிதாப நிலைக்குத் தள்ளப்பட்டுள்ளார்!

● பி. ஜெயபிரகாஷ், சர்க்கார்பதி.

*? கௌடாவின் நூறு நாட்கள்; கலைஞரின் நூறு நாட்கள் - ஒப்பிடுக...*

! கௌடாவுக்கு அவை பதவியில் தொற்றிய நாட்கள்; கருணாநிதிக்கு வெற்றி நாட்கள்!

● எஸ்.எஸ்.டி. ராஜன், சிறுகையூர்.

*? சென்னை மேயர் பதவிக்கு சிரிப்பு நடிகர் எஸ்.எஸ். சந்திரன் ம.தி.மு.க. சார்பில் போட்டியிடுவதைப் பற்றி...?*

! அதான், சிரிப்பாய்ச் சிரிக்கிறதே மேயர் தேர்தல்!



• பாவம்!



• கோடிகள்!



• நெஞ்சுரம்!

● கே. நாராயண பாலகிருஷ் ணன், கும்பகோணம்.

*? மூலிகை எரிநீர் கண்டுபிடித்துள்ள இளம் விஞ்ஞானி ராமர் பற்றி சில வரிகள்...?*

! டெல்லி விருந்தினர் மாளிகையிலிருந்து கல்தா கொடுக்கப்பட்டபோதும், அவருடைய ஆய்வுக் கூடத்தை பஸ்பமாக்கின போதிலும் தொடர்ந்து உற்சாகமுடன் செயல்படுகிறார் - பாராட்ட வேண்டும். தமிழக முதல்வர் அவருக்கு நல்ல வரவேற்பும் பார்க்கர் பேனா பரிசும் கொடுத்து டானிக் ஏற்றியிருக்கிறார்.

● ச. ஈஸ்வரன், திருச்சி - 5.

*? ஒரே இடத்தில் ஒரே விநாயகரை வைத்து வழிபட்டால், அந்த வழிபாட்டிற்கு அழைத் தால் தாமும் கலந்து கொள்ள வருவதாக கருணாநிதி கூறியிருக்கிறாரே?*

! வரவேற்க வேண்டிய அறிக்கை. அதன் பின்னணியில் ஆத்திக மனங்களைப் புண் படுத்த விரும்பாத நல்லெண்ணம் தெரிகிறது. முதல்வர், அனைத்து தரப்பினருக்கும் முதல்வர் என்கிற உணர்வு ஏற்படுத்த முயன்று வருவது புரிகிறது.

● அ. அறிவொளி, இடைப்பாடி.

*? பலமுறை முயன்றும் என் கேள்வி கல்வி யில் இடம்பெறவில்லை. எனக்காக நீங்களே ஒரு கேள்வி கேளுங்களேன்...?*

! நீங்கள் ஏன் மேலும் முயற்சி செய்யக் கூடாது...?!

● என். ஜெயராமச்சந்திரன், கோவில்பட்டி.

*? சென்னை மேயர் பதவிக்கு ஸ்டா லினைத் தவிர தி.மு.க. தரப்பில் பொருத்த மான ஆள் வேறு இல்லையா?*

! பொருத்தமாகப் பலர் இருக்கிறார்கள். விருப்பமுடன்தான் யாரும் இல்லை... விட்டுக் கொடுக்கிற காரணம்... தெரிந்ததுதானே...?

● பி. சிவா, பாளையங்கோட்டை.

*? காதல் ஆபத்தானதா?*

! காதலால் ஆபத்துகள் விளையக்கூடும் என் பதில் சந்தேகமில்லை: அந்த ஆபத்துகளைச்

சந்தித்து வெற்றிகாண காதலின் ஆழமே உதவும் என்பதிலும் சந்தேகமில்லை!

● டி. பகபதி, ஊஞ்சவேலாம்பட்டி. ☐

*? இரண்டு நிமிடங்களுக்குள்ளாகவே டைசன் குத்துச்சண்டையில் பல கோடி சம்பாதித்து விட்டாரே...?*

! குத்துச் சண்டை என்பதே அநாகரிகம் என்று கருதுவோருக்கு ஒரே குத்தில் போட்டி முடிந்து விட்டதில் மகிழ்ச்சி ஏற்படலாம். ஆனால், குத்துச் சண்டையை விரும்புகிற பார்வையாளருக்கு நிச்சயம் ஏமாற்றம் உண்டாகியிருக்கும். சம பலமும் ஆற்றலும் உள்ளவர்கள் மோதும்போதுதானே சுவாரஸ்யம்!

● ஆர்.சி. முத்துகண்ணு, திருத்தியமலை அஞ்சல்.

*? சிறந்த படைப்பாளிகளாகத் திகழ்பவர்கள் நகரத்து வாசகர்களா? கிராமத்து வாசகர்களா?*

• மாற்று...?



• ஆதங்கம்!



• நல்லெண்ணம்!



! நிகழ்வுகளை யார் கூர்மையாகக் கவனிக்கிறார்களோ – அந்த நிகழ்வுகளால் யார் பாதிக்கப்பட்டுச் சிந்திக்கத் தொடங்குகிறார்களோ, அவர்கள்தான் சிறந்த படைப்பாளிகளாகிறார்கள். இதில் கிராம – நகர வித்தியாசமெல்லாம் கிடையாது.

● ஆர்.கே.எஸ். சம்சுகனி, டி. மாரியூர்:

*? 'யாரிடமிருந்தும் ஜெயலலிதா தப்பிக்கலாம்; என்னிடமிருந்து தப்பிக்க முடியாது' என்கிறாரே சு. சுவாமி?*

! மேயர் தேர்தலில் தமது ஆதரவை சு. சுவாமி வேட்பாளருக்குத் தெரிவித்ததன் மூலம், சுவாமி தம்மிடம் தப்பிக்க முடியாமல் சிக்கிக் கொள்ளச் செய்து விட்டாரே ஜெ!

● செ. அன்புமதி கோபிநாத்,
கொப்பம்பட்டி.

*? ஜெ.வின் மறுப்புக்குக் கல்வி ஆசிரியரோ தராசோ பதில் கூறாமல், வெறும் மறுப்பை மட்டும் வெளியிட்டது ஏன்...?*

! அவரது மறுப்பின் அபத்தங்கள் வாசகர்களுக்கு மிக நன்றாகவே தெரியும் என்பதுதான் காரணம். (காண்க: இவ்வார வட்டமேஜை)

● மணிப்புறா, திருச்சி – 8.

*? உள்ளாட்சித் தேர்தலில் தமிழக திவாரி காங்கிரஸ் போட்டியிடாது என்று அக் கட்சியின் பொதுச் செயலாளர் ராமமூர்த்தி கூறியுள்ளாரே...?*

! அடடே! அப்படியொரு கட்சி இருக்கிறதா! அப்படியே இருந்தாலும், போட்டியிடுவதற்கு அதில் ஆட்கள் உள்ளனரா?

● என்.சி. ராஜேந்திரன், சின்னசேலம்.

*? ஒரு பெண் சொன்னால் நூறு ஆண் தலையாட்டுகிறான். அதையே ஒரு ஆண் சொன்னால், எவன் கேட்கிறான் என்று நாவலர் நெடுஞ்செழியன் ஆதங்கப்படுகிறாரே...!*

! பெண் சொல்கிறாள் என்பதற்காகவே நூறு ஆண்கள் தலையாட்டுவது மெய் என்றால், பொதுத் தேர்தலில் ஜெ. அமோக வெற்றி பெற்றிருக்க வேண்டுமே...? இம்முறை ஆண் சொல்லித்தானே கேட்டிருக்கிறார்கள்!

● சுதந்திரச் செல்வன், சித்தமல்லி.

*? பகுத்தறிவு இல்லாத ஆன்மிகம் மூடத்தனம்; ஆன்மிகம் இல்லாத பகுத்தறிவு அரக்கத்தனம் என்றார் திரு.வி.க... இதனை எந்த அளவு இன்றைய பகுத்தறிவாளர்கள் பின்பற்றுகின்றனர்?*

! பகுத்தறிவு என்பதே ஆன்மிக எதிர்ப்பு என்று தவறாக நினைக்கிறவர்கள்தான் இன்று அதிகம்.

● சுந்தர் அழகேசன், திருக்கழி.

*? மதனின் அனுபவம் தராசுக்கு ஏற்பட்டால்...?*

! மதனுக்கு ஏற்பட்ட அனுபவம் ஒன்றும் பெரிய அதிசயமில்லை. பல எழுத்தாளர்களுக்கும் கலைஞர்களுக்கும் ஏற்படுகிற ஒன்றுதான். அதைப் போன்றதொரு அனுபவம் எனக்கு ஏற்படுமானால், மதனைப் போலவே நானும் மன உறுதியுடன் இருப்பேன். ஆனால் அந்த சொந்த அனுபவத்தை வாசகர்களிடம் பகிர்ந்து கொண்டு, எழுதுவதை நிறுத்தி... பெரிதுபடுத்தியிருக்க மாட்டேன். அந்தப் பரிதாபத்துக்குரிய பெண்ணின் நடத்தையை எனக்கு விளம்பரம் தேடப் பயன்படுத்திக் கொண்டிருக்க மாட்டேன்.

☐ ரூ. 25 பரிசு பெறுபவர் :
டி. பகபதி
2/72, ஊஞ்சவேலாம்பட்டி அஞ்சல்,
பொள்ளாச்சி வட்டம், கோவை மாவட்டம்.
642 003.



# செய்திகள், வாசிப்பது செம்பியன்...

**பா**ரதியார் சங்கம் சார்பில் வழக்கமாக நடக்கும் பாரதியார் விழாவில் இந்த ஆண்டு ஒரு வித்தியாசமான நிகழ்ச்சி: "கோயில்கள் சூழ்ந்ததும் இந்நாடே" என்ற தலைப்பில் ஒரு கருத்தரங்குக்கு ஏற்பாடு செய்திருந்தார் பொன்னாச்சி நா. மகாலிங்கம். அறிஞர் பெருமக்கள் பலர் கலந்து கொண்டனர். வரலாற்றுச் சிறப்பும், கலைச் சிறப்பும், இலக்கியச் சிறப்பும், ஆன்மீகச் சிறப்பும் மிக்க பல கோயில்களின் இன்றைய பரிதாப நிலையை ஸ்லைடு போட்டுக் காட்டி டாக்டர் நாகசாமி விவரித்தபோது கண்கள் கலங்கின. இவற்றை புராதனப் பெருமை மாறாமல் செப்பனிட்டுப் பாதுகாப்பது மனிதனின் மன வளர்ச்சிக்கு மட்டுமல்ல, நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கும் கூட உதவும். வரலாற்றுச் சுற்றுலா, ஆன்மீகச் சுற்றுலா, கலா ரசனைச் சுற்றுலா என்று பலவித சுற்றுப் பயணங்கள் நடத்தி அந்நியச் செலாவணி ஏராளமாகச் சம்பாதிக்க முடியும். பாரிஸிலும் ரோமிலும் லண்டனிலும் இதைத்தானே செய்து, கொழிக்கிறார்கள்! ஆக, இதையெல்லாம் செய்யாதிருப்பதற்குக் காரணம், பணப் பற்றாக்குறை அல்ல; மனப்பற்றாக்குறைதான். டாக்டர் ரத்னசபாபதி குறிப்பிட்டது போல, கோயில் சார்ந்த ஒரு பல்கலைக் கழகமே தோற்றுவிக்கலாம்.

**ம**லேசிய பொதுப்பணித் துறை அமைச்சர், டத்தோ ஸ்ரீ டாக்டர் சாமிவேலு. 'டத்தோ ஸ்ரீ என்பது நமது பத்மஸ்ரீ போல மன்னர் வழங்கும் பட்டம். அவரது மனைவி டத்தின் ஸ்ரீ டாக்டர் இந்திராணி. இவர் தமிழ் நேசன் நாளிதழின் நிர்வாகத் தலைவரும் கூட. மலேசியத் தமிழர்கள் 132 பேருடன் இவர் தமிழகத் திருக் கோயில்கள் வழிபாட்டுப் பயணம் மேற்கொண்டார். இவர்களில் பலர் சீட்டு சேர்வது போல் 50ம் 100ம் மாதா மாதம் தந்து, விமானக் கட்டணம் செலுத்தியவர்கள். மற்ற செலவுகளை இந்திராணி ஏற்றுக் கொண்டார். 'உள்ளத்தால் வழிபடுவது அப்படி வழிபடுகிறவருக்கு மட்டும் நல்லது; குடும்பத்தோடு வீட்டில் பூஜித்தால் குடும்பத்தினருக்கு நல்லது; கோயிலுக்குச் சென்று வழிபடுவது ஊருக்கே நல்லது' என்று பெரியோர் கூறுவர். 132 பேரை உடன் அழைத்து வந்து கூட்டுப் பிரார்த்தனை நடத்தியதில் மலேசியத் தமிழர்கள் அனைவருக்குமே நல்லது செய்திருக்கிறார் இந்திராணி. இவர்கள் மலேசியா திரும்பியபோது வழியனுப்பு உபசார விழா நடத்தியது, உலகத் தமிழர் சேவை மையம். அப்போது பிரமுகர்கள் பலர் இந்திராணியைப் பாராட்டியது இருக்கட்டும்; தமக்கு இந்தப் பயணத்திட்டத்தில் உதவியாக இருந்த பலருக்கும் இந்திராணி சால்வை போர்த்தி பெருமைப்படுத்தினாரே, அந்தப் பெருந்தன்மை, நாம் மலேசியாவிடமிருந்து கற்றுக் கொள்ள வேண்டிய பல அம்சங்களில் ஒன்று. பஸ் ஓட்டுனர்களைக் கூட இவ்வாறு கௌரவிக்க இந்திராணி தவறவில்லை. நாம் ஒரு 'தாங்க்யூ' கூடச் சொல்வதில்லையே!

**எஸ்**.வி. சேகரின் 3500வது நாடகத்துக்கு தலைமை வகித்து நடத்திக் கொடுத்த முதல்வர், நவாப் ராஜமாணிக்கம், டி.கே.எஸ். சகோதரர்கள், என்.எஸ். கிருஷ்ணன் போன்றோரை நினைவு கூர்ந்து, 'அப்போது இருந்த ஆதரவும் இன்று நாடகங்களுக்கு இல்லை; அப்போது நாடகக் கலைஞர்களுக்கு இருந்த மரியாதையும் இன்றில்லை' என்று வருத்தப்பட்டிருக்கிறார். எஸ்.வி. சகஸ்ரநாமம், கே. பாலசந்தர், கோமல் சுவாமிநாதன் வரை அந்த மரியாதை இருந்தது. காரணம், முதல்வர் குறிப்பிட்டது போல சமுதாயப் பார்வையை அவர்கள் கைவிடாமலிருந்ததுதான். 'சோ' தமது நாடகங்களில் நகைச்சுவைக்கே முக்கியத்துவம் தந்த போதிலும் சமுதாய நோக்கையும் கைவிடாமலிருந்தார். அப்புறம் வந்தவர்கள், அவரைப் பின்பற்றி சிரிக்க வைத்தார்கள்; ஆனால் சிந்திக்கச் செய்யவில்லை. நாடகங்கள் ஜோக் தோரணங்களாக மாறின; ஆபாச இரட்டை அர்த்தங்கள் மலிந்தன. எஸ்.வி. சேகர், பழசோ புதுசோ - தமது எந்த நாடகத்தை அரங்கேற்றினாலும் அதில் லேட்டஸ்ட் அரசியல் நிகழ்வுகளை ஜோக்காக மாற்றி நுழைத்து விடுவார். அதனால் பாப்புலராக இருக்கிறார். என்றாலும் 'வடிவேலு வாத்தியார், கள்வனின் காதலி, அல்லது ஓர் இரவு தரத்துக்கு மீண்டும் ஒரு நாடகம் பார்க்க மாட்டோமா' என்று மனம் ஏங்கத்தான் செய்கிறது.

# அவ்வை சண்முகியில் இன்னொரு ரகசியம்!

பிள்ளையார் சதுர்த்தி அன்று தண்டபாணியைத் தேடிக் கொண்டு ஸ்டுடியோ பக்கம் போயிருந்தேன். லீவ் நாள் ஆயிற்றே, யார் இருக்கப் போகிறார்கள் என்று பார்த்தால் ஏவி.எம்., வாஹினியெல்லாம் ஜேஜேவென்று திருவிழா போல கும்பல்.

ஏவி.எம்மில் ஒரு பக்கம் சரத்குமாரை வைத்து, பாரதிராஜா 'வாக்கப்பட்ட பூமி'க்கு பூஜை போட்டுக் கொண்டிருந்தார். மறுபக்கம் அரவிந்தன் ஷூட்டிங். இன்னும் ஏதோ ஒரு ஷூட்டிங். வேறொரு தளத்தில் 'பார்வையாளர்களுக்கு அனுமதி இல்லை' என்று போர்டு மாட்டி ரகசியமாக உள்ளே ஏதோ நடந்து கொண்டிருந்தது.

ஆர்வக் குறுகுறுப்புடன் மற்றவற்றை மறந்து, அந்த போர்டை ஓரமாக எடுத்து வைத்து விட்டு, உள்ளே போனால் அவ்வை சண்முகி!

சரியான வேட்டை; புடைவை கட்டிய கமலைப் பார்த்துவிடலாம் என்று சப்புக் கொட்டிக் கொண்டு நைசாக உள்ளே நுழைந்தால், மேல்மருவத்தூர் பக்தர்கள் மாதிரி சிவப்பு டிரெஸ் போட்டுக் கொண்டு சுமார் இருநூறு பெண்கள்!



டான்ஸ் மாஸ்டர்கள் ரகுராமும் கலாவும் சேர்ந்து பெண்டு வாங்க, சுழன்று சுழன்று ஆடிக் கொண்டிருந்தார்கள்.

நடுவில் ஒரே ஒரு ஆண்முகம் – ரமேஷ் அரவிந்த்.

"அட! நீங்க அவ்வை சண்முகியில நடிக்கறீங்களா? யாருக்குமே தெரியாதே?" என்றேன் ஓரங்கட்டி.

ஒருமாதிரி பார்த்துவிட்டு (எவன்யா உள்ள விட்டான்!) "ஒரே ஒரு பாட்டு சீன் மட்டும்!" என்றார் கள்ளக் குரலில்.

"நடிகைகள்தான் எப்பவாவது, யாராவது பெரிய படங்கள்ல கூப்பிட்டா ஒரு சீன்ல ஆட வருவாங்க. இதுல கூட கமல் புரட்சி பண்ணியிருக்காரா?" என்று கேட்டதற்கு நோ ரிப்ளை.

ஆகவே, பொதுவான விஷயங்களுக்குத் தாவியதில் கிடைத்த தகவல்கள் பின்வருமாறு :

- டூயட்டுக்குப் பிறகு தமிழில் சொல்லிக் கொள்ளும்படியாகப் படங்கள் இல்லையென்றாலும் ர.அ.வுக்கு கன்னடத்தில் நிறைய கிராக்கி.
- தொடர்ந்து மூன்று படங்கள் அங்கே சில்வர் ஜூப்ளி பார்த்துவிட, அங்கே இங்கே நகர முடியாதபடிக்கு பிஸி.
- நல்ல ரோல் கிடைக்கிற பட்சத்தில் மறுபடி தமிழுக்கு யோசிக்கலாம். ("இந்த டான்ஸ் நல்ல ரோல்தானுங்களா?" என்று கேட்டபோது, "இது கமலுக்காக!" என்று பதில் வந்தது, உடனே.)

ரமேஷ் அரவிந்தை அனுப்பிவிட்டு

• ரமேஷ் அரவிந்த் ஒரு போஸுக்காக



• ரகுமான்

எங்காவது கமல் தட்டுப்படுகிறாரா என்று நோட்டம் பார்த்தால், கமல் அல்ல; கே.எஸ். ரவிகுமாரைக் கூடக் காணோம்! அஸிஸ்டெண்ட்கள்தான் எடுத்துக் கொண்டிருந்தார்கள்.

'பெரிய இடத்து விஷயங்கள் புரிபடவே மாட்டேங்குதுப்பா' என்று சற்று உரக்கவே முணுமுணுத்தபடி வெளியே வந்தபோது, தண்டபாணியைப் பார்த்து விட்டேன்.

நெற்றியில் இடம்கொள்ளாமல் விபூதி, குங்கும வகையறாக்களைத் தீற்றிக் கொண்டு (பிள்ளையார் பக்தி) லட்சணமாக இருந்தவன், "என்ன பெரிசா பெரிய இடத்து விவகாரத்தைக் கேள்விப்பட்டே, என்னை விட?''



• ஷங்கர்

என்றான்.

"நீ என்ன கேள்விப்பட்டே, அதைச் சொல்லு முதலில்" என்றேன் கறாராக.

"நேரடியா சொல்றது சாத்தியமில்லை. முடிஞ்சா புரிஞ்சிக்கோ. பரபரப்பு ஏற்படுத்தி, பாடிப் பறந்த காதல் கிளிகளுக்குக் கல்யாணம் ஆயிடுச்சின்னு ஒரு செய்தி. சம்பந்தப்பட்ட கிளிகள்ல ஒண்ணே ஒரு மூத்த பத்திரிகையாளர்கிட்ட விஷயத்தை சொல்லி, இப்ப எழுதிடாதீங்க சார். முறைப்படி அறிவிப்பு பின்னால வரும்னு காதைக் கடிச்சதாம்."

"அடப்பாவி! நீ யாரைச் சொல்றே?''

"இதுக்கு மேல கேள்வி கேக்காதே. அடுத்த விஷயத்துக்குப் போவோம். பரபரப்பெல்லாம் ஓஞ்சு போயி, கல்யாணமெல்லாம் முடிஞ்சு கட்ட அந்த அஞ்செழுத்து டான்ஸ் நடிகருக்குக் குழந்தை பிறந்தாச்சு. தாயும் சேயும் அண்ணாநகர் ஃப்ளாட்டுல நலமா இருக்காங்க."

"இது நல்லால்லை தண்டபாணி. கிகிகி பாணியிலேயே சொல்லிட்டுப் போறே. நேரடி நியூஸே இல்லையா?"

"என்ன பண்றது சொல்லு. இதெல்லாம் சொல்லி ஓயாட்டா என் மண்டை வெடிச்சிடும். இன்னொண்ணும் கேட்டுடு. சமீபத்துல பெரிய ஆள் ஆயிட்ட அந்த அஞ்செழுத்து 'விலை உயர்ந்த' தயாரிப்பாளருக்கு ஒரு எண்ணம் இருந்துச்சாம். மீசைக்காரத் தயாரிப்பாளர் மறுவாழ்வு கொடுத்த மூணெழுத்து 'தேச' டைரக்டருக்கு, தான் ஒரு சான்ஸ் குடுக்கலாம்னுட்டு..."

"புரியுது, சொல்லு."

"ஆனா ஒரு தனியார் டீவியில ஜனங்க அந்தப் படத்தைப் புடிச்சிக் கிழிச்ச கிழியில 'வேணாண்டா சாமி'ன்னு ஆசையை ஆழக் குழி தோண்டிப் புதைச்சிட்டாராம்."

"அடடா, என்ன ஒரு டிராஜிடி!"

"இதுக்கு நேர் ஆப்போஸிட்டா வேற ஒரு

நியூஸ் சொல்லவா?"

"தபார்! நேரடி நியூஸா சொல்றதா இருந்தா சொல்லு. இல்லாங்காட்டி, நான் அம்பேல்."

"கோவிச்சுக்காதே. சொல்றேன். பாலு தெரியுமில்லை? 'காதல் கோட்டை' என்னோட படத்தோட காப்பின்னு அறிக்கை விட்டாரே?"

"ஆமா?"

"அவர் இப்ப ஒரு படம் பண்றார்."

"இது ஒரு நியூஸா? ப்பூ!"

"முழுக்கக் கேளு. படத்தை எடுக்கறது யார் தெரியுமா? 'காதல் கோட்டை' எடுத்த அதே சிவசக்தி பாண்டியன்!"

"அட, மெய்யாவா?"

"ஆமா! தன்னோட எந்தக் கதையைப் பார்த்து காதல் கோட்டை காப்பி அடிக்கப் பட்டதா சொன்னாரோ, அதே கதையில சில மாற்றங்கள் செஞ்சு 'காலமெல்லாம் காதல் வாழ்க'ன்னு டைட்டில் வெச்சி, அகத்தியனோட அடுத்தப் பட ரிலீஸ் சமயம் இதையும் ரிலீஸுக்கு உடறதா யோசனைல இருக்காங்க."

"பழைய 'சிகரம்' சமாசாரம் ஞாபகம் வருதுப்பா. போகட்டும். இதுல யார் நடிக்கறாங்க?"

"முடிவாகலை. முச்சூடும் புதுமுகங்களைப் போட்டு எடுக்கறதா பிளான் பண்ணியிருக்காங்களாம்!"

"புதுசா ஒரு தகவல் சொல்லியிருக்கே. வாழ்க."

"தெரியுமா உனக்கு? ரகுமான்கிட்ட மியூசிக் கம்போஸ் பண்ணி வாங்க அவனவன் தவியா தவிச்சிட்டிருக்கறப்ப, ஷங்கர் அதுக்குப் புதுசா ஒரு வழி கண்டுபிடிச்சி, ஜெயிச்சிருக்கார்."

"அதென்ன?"

"இங்க கம்போஸிங் உட்கார்ந்தா, யாராவது வந்து தொந்தரவு பண்ணிட்டே இருக்காங்க. தவிர ரகுமானுக்கு 'மூட்' வர இன்ன நேரம் தான்னு இல்லை. திடீர்னு வரும், போகும். அவருக்கு மூட் வரும்போது எட்டும் கூடி வரணும். பார்த்தார் ஷங்கர். பேசாம, 'ஒரு ஜாலி ட்ரிப் அமெரிக்கா போயிட்டு வரலாம் வாங்க'ன்னு கூட்டிட்டுப் போயி, அடுத்தப் படம் 'ஜீன்ஸ்'க்கு அத்தனை பாட்டுங்களையும் கம்போஸ் பண்ணி எடுத்துட்டு வந்துட்டார், ஓசைப்படாம."

"த பார்றா! இப்படி ஒரு அணுகுமுறையா? அது சரி. வசதி இருந்தா அமெரிக்கா என்ன, ஆம்ஸ்ட்ராங் போன இடத்துக்குக் கூடக் கூட்டிட்டுப் போய் வரலாம்தான்."

"வசதி இருந்து என்ன கிஷ்டா? எல்லாம் வகையா அமையணுமில்லை? நம்ம குஞ்சுமோனையே எடுத்துக்கோ. கோடி கோடியா கொட்டி 'காதல் தேசம்' எடுத்தார். படம் சுமாராத்தான் போவுது. மனுஷன் பயங்கர டென்ஷன் ஆயிட்டாரு. அடுத்ததா எடுத்துட்டிருக்கற 'சக்தி' படத்துல இப்ப முழு கவனம்! படம் ஏறக்குறைய முடிஞ்சே போன நிலையில இப்ப நிறைய காட்சிகளை மாத்தி, மறுபடி ரீ-ஷூட் பண்ணிட்டிருக்கார் தெரியுமா?"

"அய்யய்யோ! ஹீரோயின் யுவராணி நடிப்புக்கு டாட்டா சொல்லிட்டு ஃபாரின் போய் செட்டில் ஆயிட்டதா சொன்னாங்களே? டூப் போட்டு எடுப்பாங்களாமா அப்ப?"

"அது தெரியலை. 'தீபாவளிக்கு ரிலீஸ் பண்ணி, அடுத்த தீபாவளி வரைக்கும் ஓட்டப் போறேன் பார்'னு சபதம் பண்ணி எடுத்துட்டிருக்காராம்."

"ஓடறது வேற, ஓட்டறது வேற இல்லை?"

"உரக்கச் சொல்லாதே. உன்னைப் புடிச்சி பாயா போட்டுருவாங்க."

**- கிச்சா**

## ஜாலி போட்டி - 6
### முடிவு

அரசியல் தலைவர்களுக்கேற்ற காய்கறி, பழ, எண்ணெய் வித்து வகைகளைச் சரியாகக் கண்டு பிடிப்பதில் வாசகர்கள் கொஞ்சம் சிரமப்பட்டிருக்கிறார்கள் என்று தெரிகிறது. ஒருவரே பல முகங்களுடன் இருப்பதாலோ என்னவோ!

எனிவே, சரியான விடைகள் எழுதியவர்களுள் குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கப் பட்டு, ரூ.5000/- பரிசு பெறுபவர்:

மு. கார்த்திகேயன்,
த/பெ. து. முருகானந்தம்,
முருகன் கிளாத் ஸ்டோர்,
55டி. மெயின் ரோடு,
திருப்பாச்சேத்தி - 630 610.
பசும்பொன் மாவட்டம்.

வாழ்த்துக்கள்!

**சரியான விடைகள்:**

மூப்பனார் - வெண்டைக்காய்
தேவேகௌடா – தர்பூசணி
ஜெயலலிதா – பூசணிக்காய்
லட்சுமி பார்வதி – வெங்காயம்
ஹெக்டே – கருவேப்பிலை
நரசிம்மராவ் – ஆமணக்கு (விளக்கெண்ணெய்)
கருணாநிதி – இளநீர்

# கடலோரக் கொலைகள்


அலைகள் பாதங்களைத் தழுவ...
கதை: பெனிட்டோகுமார்
9
படம் : சசி
நந்து! இங்க வந்த வேலை அநேகமாக முடிஞ்சுடுச்சு. ரெண்டு மூணு நாள்ல, ஆராய்ச்சி தொடர வேற ஊருக்குப் போயிடுவோம்.
அப்புறம் என்னை மறந்துடுவீங்க...


என்னால் மறக்க முடியாது நந்து! உங்களை, இந்த கிராமத்தை, இந்த மக்களை...
நானும் உங்க நினைவாகவே இருப்பேன்.


இந்தாங்க உங்களுக்கு ஒரு பரிசு! நானே செய்தது...
அழகான டாப்பெஸ்ட்ரி... பொக்கிஷமாகப் பாதுகாப்பேன், ஆஷா!


என்ன எழுதறீங்க பிரதீப்?... 'என் குறிக்கோள் தங்கம்'... அப்படீன்னா?
அப்படீன்னா நீ ஒரு முந்திரிக் கொட்டைன்னு அர்த்தம்!


இன்னொருத்தர் எழுதறதை எட்டிப் பார்த்துப் படிக்கிற அயோக்கியன்!
பிரதீப்! பிளீஸ்!... நந்து! வருத்தப்படாதீங்க. அவர் இப்படித்தான். சிந்தனை ஓட்டம் தடைப்பட்டா சீறுவார்.


நந்து! உன் பேனா நண்பரை ஒழுங்கா அறிமுகம் செய்து வை!
ஷியூர்! இவர் நாகர்கோயில் இந்து கல்லூரியில் லெக்சரர், நாகராஜன்.


யூனிவர்ஸிடி ஆதரவோடதான் பிரதீப் ஆராய்ச்சி நடத்தறார். அவருக்கு உதவ நாகராஜனை துணைவேந்தரே அனுப்பி யிருக்கார்.
ஐ ஸீ!


அன்னிக்கு ராத்திரி இரண்டு மணிக்கு பரமகுரு, உங்ககிட்ட பணம் வாங்கிட்டு வரதா சொல்லித்தான் புறப்பட்டான்னு தகவல்...
இங்க வரலையே. நானும் இரண்டு மணிக்குத்தானே படுக்கப் போனேன்!


அப்ப இடிக்குதே! ஒருவேளை கள்ளச்சாராயம் வடிக்கிறவங்ககிட்ட கடன் கேட்டு, தகராறு முற்றி, தீர்த்துக்கட்டிட்டாங்களோ?
எங்களுக்கு எப்படி தெரியும்? விசாரியுங்க.


இரவு முழுவதும் நந்து தூங்காமல் புரண்டான். காலையில்....
ஒரே தலைவலி! டாக்டர் ஜகந்நாதன்கிட்டே போயிட்டு வரேம்ப்பா.


பிரயோஜனமில்லேடா! அவரை யாரோ பரலோகம் அனுப்பிட்டாங்களாம்! இப்பத்தான் ராஜதுரை வந்து சொல்லிட்டுப்போறான்!
(தொடரும்)

# துருக்கியில் ஒரு சஸ்பென்ஸ்!

இந்தியாவின் சைஸில் கால் பங்கு துருக்கி. ஐந்தரை கோடிக்கும் கொஞ்சம் அதிகமான மக்கள். முஸ்லீம் மக்கள் பெரும்பான்மை என்றாலும், கிறிஸ்துவ ஐரோப்பா வுக்கும், மேற்கு மற்றும் மத்திய ஆசிய இஸ்லாத்துக்கும் ஒரு பாலமாகத் தன்னை அடையாளம் காட்டிக் கொள்ளும் மதச்சார்பற்ற நாடு.

இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் துருக்கியை ஆண்ட அடாடர்க் என்பவருக்கு சலாம் வைக்க வேண்டும். மதச்சார்பற்ற நந்தவனமாக துருக்கியை அவர்தான் உருவாக்கினார். பெண்களின் 'பர்தா' வழக்கத்தை மாற்றினார். ஆண்கள் குல்லா அணிய வேண்டாம் என்றார்.

இன்று நிலைமை தலைகீழ்! துருக்கி மீண்டும் இஸ்லாமிய தீவிரவாதப் பிடியில் சிக்கிக் கொள்ளுமோ என்ற அச்சம்.

குறிப்பிடும்படியாக மூன்று கட்சிகள். வெல்ஃபேர் பார்ட்டி. இது இஸ்லாமிய தீவிரவாதக் கட்சி. ட்ருபாத் (True Path) கட்சி. மதர்லாண்ட் கட்சி. இந்த இரண்டும் தீவிரவாதம் கூடாது என்பவை. அதே சமயம் பதவி, போட்டி என்று வரும்போது பூனையும் எலியும்.

அடாடர்க் மறைவுக்குப் பிறகு அவரது கனவுகளை ஓஸல் என்ற பிரதம மந்திரி கச்சிதமாக நிறைவேற்றிக் கொண்டே வந்தார். 1993 ஆகஸ்ட் எட்டாம் தேதி அவர் இறந்தார். கூடவே மதச்சார்பின்மை மீது அவர் காட்டிய தீவிரமும் இறந்தது என்றால் தப்பில்லை.

தொடர்ந்து டான்ஸி சில்லர் பிரதமரானார். துருக்கி கண்ட முதல் பெண் பிரதமர். ஹார்வர்டு பட்டதாரி. முன்னாள் பொருளாதாரப் பேராசிரியை. ட்ருபாத் கட்சியின் தலைவி. கவர்ச்சியான பெண்மணி.

ரொம்பவும் எதிர்பார்ப்புகளை மக்களிடையே அவரது ஆட்சி ஏற்படுத்தியது. தீவிரவாத முஸ்லீம்கள் கையில் ஆட்சி போய் விடக்கூடாது என்பதில் அவர் தீவிரம் காட்டினார். எல்லாம் சரிதான். ஆனால் 'கோடி கோடியாக சில்லரும் அவர் கணவரும் சேர்ந்து சொத்து சேர்க்கிறார்கள்' என்ற குற்றச்சாட்டிலிருந்து அவர் தப்ப முடியவில்லை.

பொதுத் தேர்தல் வந்தது. எந்தக் கட்சிக்கும் பெரும்பான்மை இல்லை. 550 உறுப்பினர்களைக் கொண்ட பாராளுமன்றத்தில் தீவிரவாதக் கட்சிக்கு 158 இடங்கள். சில்லரின் ட்ருபாத் கட்சிக்கு 135. மதர்லாண்ட்டுக்கு 131. மீதி சில்லறை கட்சிகளுக்கு.

ஆக எதற்கும் செயல்படத் தேவையான பெரும்பான்மை இல்லை.

தீவிரவாதக் கட்சியின் தலைவர் எர்பகான் தேர்தலுக்கு முன் அனல்பறக்கப் பிரசாரம் செய்தார். 'நாங்கள் ஆட்சிக்கு வந்தால் ஆஹா... பார்... நேட்டோ (NATO) அமைப்போடு துருக்கியின் உறவை வெட்டி, இஸ்லாமிய நேட்டோ அமைப்போம். இஸ்லாமிய நாடுகளோடு கட்டித் தழுவுவோம்' என்றெல்லாம் தீவிரவாத உணர்வுகளுக்குச் சூடேற்றினார்.

எர்பகான்

ஆனால் தேர்தல் முடிவு களுக்குப் பின், அதிகமான இடங்களைப் பெற்ற தனிக் கட்சியாக இருந்தாலும் ஆட்சி நடத்த, மதச் சார்பின்மை கட்சிகளின் தயவு வேண்டிய நிலையில் எர்பகானின் சுருதி இறங்கியது.

ட்ரூபாத் கட்சியின் ஆதரவைப் பெற்று பாராளு மன்றத்தில் நம்பிக்கைத் தீர் மானத்திலும் வெற்றி பெற்று விட்டார் எர்பகான்.

"இஸ்லாமிய தீவிரவாதமெல் லாம் கூடாது. மதச்சார்பின்மை தான் அவசியம். இந்தப் பிரச்னையா இப்போது முக்கியம்? விலைவாசி, பணவீக்கம் ஏறிக் கொண்டிருக் கிறது. உலக முதலீடுக்கு நாட்டைத் திறந்து விட வேண் டும். அதுதானே முக்கியம்?" என்று எர்பகான் இன்று தலைகீழ்ப் பாடம் படிக்கிறார்.

பதவியேற்றவுடன் மறக் காமல் அடாடர்க் நினைவிடத் துக்குப் போய் அஞ்சலி செய்து விட்டும் வந்தார்.

ஒரு மதத் தீவிரவாதியின் தலைமையில் மதச் சார்பின்மை வெற்றி பெறுமா? இது பதவிக் காக நடைபெறும் கண் துடைப்பு நாடகமா? இல்லை, உண்மையிலேயே ஒரு மனமாற்றமா?

துருக்கி மக்கள் சஸ்பென்ஸில் தவிக்கிறார்கள்.

— ராணிமைந்தன்.

கன்யாவைக் கட்டுப்படுத்த முடியாமல் திணறினான் ஸ்ரீராம். ஒரு கட்டத்தில், அழுது ஓயட்டும் என்று அப்படியே விட்டு விட்டான்.

விசும்பல் மெல்ல அடங்கிய போது 'அப்பாடி!' என்று இருந்தது.

''அதுக்குத்தான் நான் ஆரம்பத்துலேயே சொன்னேன் – நாம தனியா குடித்தனம் வைச்சுக்கலாம்னு...''

''நானும் காரணத்தோடதானே அது வேண்டாம்னு சொன்னேன்? எனக்கு இந்தக் குடும்பத்தைத் தெரிஞ்சுக்கணும், புரிஞ்சிக்கணும்ங்கற தாகம் இருந்தது. அதான் உனக்குத் தெரியுமே ஸ்ரீராம்... அது கஷ்டமா இருக்கும்ங்கறதையும் எதிர்பார்த்தேன்; ஆனா இப்பத்தான் புரியுது– நான் என்னை எவ்வளவு மாத்திக்கிட்டாலும் இந்த



# உள்ளே வரலாமா?

**9** மஞ்சுளா ரமேஷ் ?

வீட்டிலே ஒரு அன்னிய மனுஷியாத் தான் இருப்பேன்... நீங்க எல்லாம் ஊடு - பாவா கலந்து பழகறீங்க... நான் மட்டும் உன் ஆபீஸ் ரூம் வாசல்ல நின்னு கேட்ட மாதிரி 'உள்ளே வர லாமா?'ன்னு கேட்டுக் கிட்டேதான் இருக்கணும்..."



"சுகன்யா ப்ளீஸ்..."

"இரு ஸ்ரீராம்! நான் இன்னும் பேசி முடிக் கலை... எத்தனை விஷயங்கள்ல நான் என்னை முழுக்க மாத்திக்கிட்டிருக்கேன்...? யோசிச்சிப் பாரு... இரண்டே வாரத்துல இந்த வீட்டுச் சமையலைக் கத்துக்கிட்டேன்; கொஞ்சம் கோணலா போனாலும் கோலம் போடப் போட, வருது; அப்பா, அம்மா, குமார், வசந்தின்னு அவ்வளவு பேரோட வேலைகளையும் இழுத்துப் போட்டுக்கிட்டுச் செய்யறேன்... அதையெல்லாம் விடு, மஞ்சள் உரைச்சுக் குளிக்கவும் மாசத்துல மூணு நாள் பாயைப் போட்டுக்கிட்டு ஒதுங்கிப் படுக்கவும் கூடப் பழகிக் கிட்டேன்... இருபத்தி ஐந்து வருஷமா நான் வாழ்ந்த விசாலமான வாழ்க்கையை சாஸ்திரம் - சம்பிரதாயம்ங்கற சட்டத்துக்குள்ள அடக்கிப் போட முடிஞ்சுருக்கு... அறிவு எல்லாத்தையும் கேள்வி கேட்டாலும் மனசுக்குக் கட்டுப்பட்டுப் போய்க் கிட்டிருக்கேன்... I think I've done a fairly

## தங்க நகை பரிசு!

இன்னும் 17 வாரங்கள் வெளிவரப் போகிற இந்தத் தொடர்கதை, வாராவாரம் ஓர் எழுத்தாளரின் பெயரில் வெளியாகும். ஆனால் முழுக் கதையையும் எழுதுபவர் ஒரே எழுத்தாளர்தான்! யார் அவர்?

வாரா வாரம் படித்து, யூகித்துக் கொண்டே இருங்கள். கடைசி வார அத்தியாயத்துடன் வெளியாகப் போகிற கூப்பனில், 'தொடரை எழுதியவர் யார்?' என்கிற உங்கள் யூகத்தை எழுதி அனுப்புங்கள்.

உங்கள் யூகம் சரியானதாக இருந்தால் உங்களுக்குத்தான் மின்னும் தங்க நகை பரிசு!

பலர் சரியான விடை எழுதியிருந்தால் குலுக்கல் முறையில் ஓர் அதிர்ஷ்டசாலி தேர்ந்தெடுக்கப்படுவார். ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.

good job... ஆனா.. இங்க யாருக்குமே என் செய்கைகளோட மதிப்பு புரியலை... சரி, மதிப்பு வேண்டாம்.. ஆறு மாசமாக வீட்டுல வளைய வர்ற ஒரு ஜீவன் பேர்ல தரக்கூடிய இயல்பான அன்புகூட..."

சுகன்யாவின் கண்கள் மீண்டும் குபுக்கென்று நிரம்பிக் குளமாகின.

"வசந்தி மட்டும் இல்லைன்னா என்னால இங்க சமாளிச்சே இருக்க முடியாதுன்னு நினைக்கிறேன்... ஆனா அவளும் ரொம்பக் கட்டுப்பட்டுத்தான் இருக்கா.. ஒரளவுக்கு மேல என்கூட ஒட்ட மாட்டா. அப்பா - அம்மா மனசுதான் அவளுக்கு முக்கியம். குமார்...! அவனை ஏதோ விளையாட்டுப் பிள்ளைன்னு நினைச்சேன். He let me down so badly!"

சுகன்யாவுக்கு அந்தச் சம்பவத்தை நினைக்க, மீண்டும் அதிர்ச்சியில் உடல் உறைந்தது.

**ரா**ஜுவுக்கு அவசர வேலை முடித்துக் கொடுத்து வீடு திரும்பியபோது வாசல் கதவு மூடியிருந்தது. திறந்த ஜன்னல் வழியே சரஸ்வதியின் குரல் கேட்டது.

"ஸ்ரீராம்தான் இப்படிப் போய் இரண்டுங் கெட்டானா ஒரு கல்யாணத்தைப் பண்ணிண்டுட்டான்... நீயும் அது மாதிரி ஏதாவது பண்ணித் தொலைச்சுடாதேடா, குமார்!"

சுகன்யா பலமாக அடிபட்டவளாக நின்றாள்.

"என்னம்மா இது...!" குமார் சமாதானப்படுத்தும் குரலில் சொன்னான்.

"இப்ப போன் பண்ணினாளே, குஜராத்திப் பொண்ணு..."

"யாரு? சோனாலியைச் சொல்றியா?"

"ம்... நாளைக்கு அவளைத்தான் கல்யாணம் பண்ணிப்பேன்னு வந்து நிப்பியோ...?"

"ஐயோ, அம்மா! அவ என் கூட படிக்கற பொண்ணு! ஏதோ புத்தகம் வேணும்னு போன் பண்ணினா. அவ்வளவுதான்..."

"அப்படித்தானே எல்லாமே ஆரம்பிக்கிறது..."

"இதோ பாரு... ஒண்ணும் ஆரம்பிக்கலை... என்னைப் பொருத்தவரைக்கும் ஆரம்பிக்கவும் ஆரம்பிக்காது. அண்ணா மாதிரி நான் எதுவும் செய்ய மாட்டேன்... பிராமிஸ்! போதுமா...?"

"ஒரு மாட்டுப் பொண்ணாவது எனக்குத் தோதா நம்ம குடும்பத்துக்கு ஏத்தவளா வரட்டும்டா..."

அப்படியே வாசல்படியில் சுருண்டு உட்கார்ந்தாள் சுகன்யா. ஆறு மாதங்களாய் அவள் செய்த முயற்சிகள், காட்டிய நிஜமான ப்ரியம், பேசிய அன்பான சொற்கள் என்று அத்தனையையும் கசக்கிச் சுருட்டி குப்பைத் தொட்டியில் கடாசிவிட்டது அந்தக் கடைசி



வாக்கியம்.

சரஸ்வதிக்குத்தான் தன்னை ஏற்க மனமில்லை என்றால், இந்தத் தலைமுறையைச் சேர்ந்த குமார் கூடவா இப்படிப் பேசுவான்! 'ஏன்மா? மன்னிகிட்டே என்ன குறையைக் கண்டே... இங்க வந்து எவ்வளவு தூரம் தன்னை மாத்திண்டிருக்கா...' என்று ஒரு வாக்கியம் ஏன் அவனிடமிருந்து வெளிப்படவில்லை...?

சுகன்யா சமாளித்துக் கொண்டு எழுந்தாள். 'உள்ளே வரலாமா?' என்று இவர்களிடம் கேட்டுப் பயனில்லை... வாசல் கதவை மட்டும் தான் திறப்பார்கள்....

"**த**னியா போயிடலாம் ஸ்ரீராம்.." அழுத்தமாக சுகன்யா சொன்னபோது அவன் உறுதி பயமுறுத்தியது.

"இப்போ இந்தக் கட்டத்துல அதைப் பத்திப் பேசறது கொஞ்சம் சங்கடமாயிருக்குமே சுகி..."

"ஏன்... நீயும் பயப்படறயா? அப்பா, அம்மாவைக் கண்டு பயம்தானே...?"

சட்டென்று கோபம் வந்தாலும் சுகன்யா விரக்தியில் பேசுகிறாள் என்பது புரிய, தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டு பதில் சொன்னான் ஸ்ரீராம்.

"இவ்வளவு நாள் கழிச்சு தனிக்குடித்தனம் போறோம்னு சொன்னா, இங்க இருக்கப் பிடிக்காமதான் போறோம்ங்கறதை எழுதிக் கொடுத்த மாதிரி ஆயிடுமே... முதல்லயே போயிருந்தா அது வேற விதமாக இருந்திருக்கும்..."

"பரவாயில்லை ஸ்ரீராம். நீ சொல்ற மாதிரி அவங்க ஆரம்பத்தில கொஞ்சம் வருத்தப்பட்டாலும், கொஞ்ச நாள்ல எல்லாத்தையும் மறந்துடுவாங்க. இப்படியே தொடர்ந்து இருக்கிறது எனக்கு ரொம்பக் கஷ்டம். போலித்தனமா போயிடும். இத்தனை நாளா ஏற்படுத்திக்கிட்ட நல்லுணர்வெல்லாம் நொறுங்கிப் போயிடுத்து... வெளியே போய் அங்கே ஒரு பாதுகாப்பான தூரத்திலே இருந்துக்கிட்டே பழகறேன்... அதுதான் நம்ம எல்லாருக்கும்

**"இன்னைக்கு புதுப் படம் எதா வது ரிலீஸ் ஆகுதா?"**

**"எதுக்குடி கேட்கற?..."**

**"நம்ம பையன் சீக்கிரமா எழுந்து பொறுப்பா ஸ்கூலுக்குக் கிளம்ப றானே!"**

**— எஸ்.எஸ். பூங்கதிர்**

நல்லது."

"நல்லா யோசிச்சு சொல்லு கவி... போயிட்டா திரும்பவும் வர முடியாது..."

"யோசிச்சுட்டேன் ஸ்ரீராம். நான் சொல்ற முடிவு சரியாத்தான் இருக்கும். நீ நாளைக்கே அப்பா - அம்மாகிட்டே விஷயத்தைச் சொல்லு. வீடு பார்க்க ஆரம்பிக்கலாம். இதோ பார், உனக்காகக் காத்திருந்த நேரத்துல நான் ஹிந்து ரென்டல்ஸ்ல பார்த்துக் குறிச்சு வைச் சிருக்கேன். நாளைக்கே நாம அப்பா அம்மா கிட்டே சொல்லிடலாம். நீ ஆபீஸ் போனப் புறம் நான் இந்த இடத்துக்கெல்லாம் போன் பண்ணி விசாரிக்கறேன். அவசியமானதுக்கு மட்டும் நேர்ல போய், நானே பார்த்து ஏதாவ தொரு நல்ல இடம் பிக்ஸ் பண்ணிடறேன். உனக்கு அதிகப்படியான வேலை வராது ஸ்ரீராம்..."

"நீ எல்லாத்தையும் அழகா மானேஜ் பண்ணிடுவேனு எனக்குத் தெரியாதா... என் கவலை அதுவேயில்லை..."

தலையணைகளை அடுக்கி, அவளை மெல்லச் சாய்த்து உட்கார வைத்தபடி பேசி னான்.

"நாளைக்கு நீ எழுந்திருக்கும்போதே என்னையும் எழுப்பி விட்டுடு. நீ குளிக்கற சமயத்துல அப்பா அம்மாவைத் தனியா கூப் பிட்டுப் பேசிடறேன்..."

"நானும் கூட இருக்கறதுதானே நியாயம்...?"

"வேண்டாம் கவி... அவங்க ஏதாவது கருக்குனு சொல்லிட்டா அந்தக் கஷ்டம் என் னோட போயிடட்டும்... அதையும் வேற உங் கிட்டே சொல்லி, உன் வேதனையை அதிக மாக்க மாட்டேன்..."

- இப்போது அவன் மடியில் முகம் கவிழ்த்து அவன் படுத்திருந்தான். குரல் தெளி வில்லாமல் ஒலிக்க, அவன் பிடரியைப் பிடித்து உலுக்கிக் கேட்டாள்.

"என்ன சொன்னே...?"

மீண்டும் விஷயத்தைச் சொன்னபோது அவன் தலைமுடியைக் கோதிய அவள் விரல் கள் கண நேரம் இறுகி ஒரு கற்றை முடியைப் பற்றின.

"ஆ...! வலிக்கறது..." என்றபடி அவள் கையைத் தலையிலிருந்து விலக்கி விட்டான்.

சுகன்யா ஐந்தரைக்கு எழுப்பிவிட்ட போது அப்பா வாசல் வராண்டாவில் பேப் பருடன் உட்கார்ந்திருந்தார். அம்மா பிரம்புக் கூடையில் செம்பருத்திப் பூ பறித்துப் போட்டுக் கொண்டிருந்தாள்.

வாசலில் சுகன்யா கைவண்ணத்தில் சிறிய கோலம். அப்பா பக்கத்தில் போய் உட்கார்ந்த ஸ்ரீராம், கோலத்தைக் கூர்ந்து பார்த்தான். சது ரங்கள், செவ்வகங்கள் இல்லாமல் நளினமாய் வளைந்த கோடுகளைக் கொண்டு ஒரு சித்திரம் போல் வரைந்திருந்தாள். மைய வடிவத்தைச் சுற்றிப் புள்ளிகளால் அலங்காரம் செய்திருந் தாள்.

புள்ளிகளை முதலில் வைத்து, அவற்றை இணைத்துக் கோலம் போடுவதைத்தான் அவன் பார்த்ததுண்டு. சுகன்யாவின் கோலம் வித்தியாசமான புத்தழகுடன் இருந்தது. புள்ளிக் கோலம் என்பது நிர்ணயித்த விதிப்படி வடி வமைக்க வேண்டும். இது அப்படியில்லை... கற் பனைப்படி கை, வேலை செய்திருக்கிறது. புள்ளிகளை அப்புறம்தான் - சும்மா துணைக்கு அழைத்திருக்கிறாள். சுகன்யாவின் வாழ்க்கைத் தத்துவத்துக்கே அந்தக் கோலம் ஒரு வடிவம் தருவதைப் போல் உணர்ந்தான். அவளுடைய தனித்தன்மை, அதைக் கூச்சமின்றி வெளிப் படுத்தும் துணிவு, அந்த வெளிப்பாட்டில் இழையோடும் அழகு, சுதந்தர உணர்ச்சி... என்று அத்தனையையும் உள்ளடக்கியிருந்தது. பார்க்கப் பார்க்க, முத்துப் பதித்த ஒரு நெற்றிச் சுட்டியைப் போல் அது ஒளிர்வதாகப்பட்டது அவனுக்கு.

சுகன்யா வருவதற்குள் பேசி முடிக்க வேண் டும் என்பது நினைவுக்கு வர, தோட்டத்தில் பூப்பறித்துக் கொண்டிருந்த அம்மாவை, "அம்மா, இங்க வாயேன்..." என்று அழைத்தான்.

கேள்விக்குறியுடன் வந்தவளை, 'உட்காரு' என்று சைகை செய்ய, திண்ணையில் உட்கார்ந் தாள்.

முகத்துக்கு நேராக அவர்களைப் பார்த்துச் சொன்னான். "சுகன்யாவும் நானும் தனியா குடித்தனம் வைச்சுடலாம்னு முடிவு பண்ணி யிருக்கோம்..."

சொல்லிவிட்டானேயொழிய, பெற்ற மனங் களுக்கு வலி ஏற்படுத்துகிறோமே என்ற குற்ற உணர்வு அடுத்த கணமே அவனை ஆட் கொண்டது.

ஒருகணம் பார்வை பரிமாறிக் கொண்ட சரஸ்வதியும் ராமநாதனும் தொடர்ந்து பேசிய போது அவனால் தன் காதுகளை நம்ப முடிய வில்லை!

(தொடரும்)

வித்தகர் :

மனநல மருத்துவர் மாத்ருபூதம்

# இதில் கிடைக்கும் மகிழ்ச்சி வேறெதில் கிடைக்கும்?

'படிப்பு ஒன்றுதான் செல்வம்' என்று சொல்லிச் சொல்லித் தம் தாய் தன்னை வளர்த்ததாகச் சொல்லும் டாக்டர் மாத்ருபூதம், ஐந்து வயதில் தந்தையை இழந்தவர். முழுக்க முழுக்கத் தாயின் கவனிப்பில் வளர்ந்தவர்.

"பத்து ரூபாய் சம்பாதிச்சா ஒரு ரூபாய் தர்மம் பண்ணு என்று சின்ன வயதிலேயே என் தாய் சொல்வார். இருநூறு ரூபாய் சம்பாதித்த போதிலிருந்து அந்தப் பழக்கத்தைக் கடைப்பிடிக்கிறேன். இன்று ஆயிரக்கணக்கில் சம்பாதிக்கும் போதும் அதே பழக்கம் தொடர்கிறது. அதனால் தான் சந்தோஷமும் இன்னும் கூடவே இருக்கிறது!" என்கிறார்.



அவர் ஒரு கவிஞர். நாடக ஆசிரியர். பதிமூன்று நாடகங்கள் எழுதியிருக்கிறார். முறைப்படி கர்நாடக சங்கீதம் பயின்றவர். இனிமையாகப் பாடுவார். ஒரு ஹிந்தி பண்டிட்டும் கூட. ஆனால் அவர் நாடு முழுக்க அறிமுகமாகியிருப்பது புகழ்பெற்ற மனநல மருத்துவராக.

டாக்டர் மாத்ருபூதத்தின் தொழில் அது தான். ஆனால் அவரோடு பேசிக்கொண்டிருந்தால் அவர் உதிர்க்கிற நகைச்சுவை முத்துக்களைக் கேட்டால், 'நாளெல்லாம் மன நோயாளிகளுடன் பழகுகிறவர் எப்படி இத்தனை ஜாலியான மனிதராக இருக்கிறார்' என்று வியக்கத் தோன்றும்.

ஆனால் இந்தத் துறை மருத்துவராக இருப்பதற்கு இப்படி எப்போதும் உற்சாகமாகவே இருக்க வேண்டியது அவசியம் என்கிறார் மாத்ருபூதம்.

"மற்ற வேலைகள் மாதிரி இல்லை இது. மனசுக்குப் பிடிக்காமல் மனநலத் துறையில் ஒருவன் பணியாற்ற வந்தால், அவன் மட்டுமின்றி, நோயாளியும் குட்டிச்சுவர்தான்!" என்கிறார்.

'சிசோப்ரேனியா' (SCHIZOPHRENIA) என்ற மனச் சிதைவு நோய்க்கான மருத்துவம் அளிப்பதில் சாதனை புரிந்திருப்பவர் மாத்ரு பூதம்.

இந்த நோய்க்கு உள்ளானவர்கள், தொடர்பில்லாமல் பேசிக் கொண்டே போவார்கள். தன்னம்பிக்கையின்மை, தேவையின்றி ஆத்திரப்படுவது, சந்தேகப்படுவது என்று அறிவை மழுங்கடிக்கும் நோய் இது. கிட்டத்தட்ட பைத்தியமாக்கிவிடும்!

மாத்ருபூதம் இந்நோய்க்கு வழங்கும் ஒருவித நூதன மருத்துவத்தின் வெற்றியைக் கேள்விப்பட்டு அரபு நாடுகள், இலங்கையிலிருந்தெல்லாம் நோயாளிகள் இதற்கான சிகிச்சை பெற இவரிடம் வருகிறார்கள்.

"போயும் போயும் இந்தத் துறைக்கா வந்தாய்?' என்று என் நண்பர்கள் கேட்பார்கள். ஆனால் இந்த வகை மருத்துவம் பெற வரும் நோயாளிகளுக்குச் சிகிச்சையளித்து, வெற்றி பெறும்போது கிடைக்கிற மகிழ்ச்சியும் ஆத்ம திருப்தியும்

யிலுமே கிடைக்காது!" என்று பெருமிதத்துடன் சொல்கிறார்.

**ம**னநல மருத்துவரான தன் மனதையே பாதித்த ஓர் அனுபவம் சமீபத்தில் நடந்ததாகக் குறிப்பிட்டார் மாத்ருபூதம்.

என்ன அது?

இவரிடம் மனநல சிகிச்சைக்காக கபூர் என்ற நோயாளி ஒருவர் வந்திருக்கிறார். அவருக்கு மருத்துவம் பார்த்து, குணப்படுத்தி, வீட்டுக்கு அனுப்பியபின், வீட்டிலிருப்போர் அவரைத் தொடர்ந்து சரியாக நடத்தாததால் அவர் மனமுடைந்து போய்விட்டார்.

சமீபத்தில் அவர் காலமாகி விட, "மகவும் வருத்தமாகி விட்டது" என்றார் டாக்டர்.

"தீபாவளி, ரம்ஜான் போன்ற பண்டிகைகளின்போது இனிப்பெல்லாம் வாங்கி வந்து தருவார் அவர். இத்தனை சீக்கிரம் இறந்திருக்க வேண்டாம்!" என்று உருகுகிறார்.

**கா**ஞ்சி முனிவருடன் டாக்டரின் தந்தைக்குத் தொடர்பு இருந்திருக்கிறது. ஐம்பது வருடங்களுக்கு மேலாகத் தம் அன்னதானப் பணியால் 'அன்னதான ராமசாமி' என்றே பரமாச்சாரியாரால் பாராட்டப்பட்டவர் அவர்.

அந்த மகானுடனான தொடர்பு இவருக்கும் தொடர்ந்ததைப் பெரும் பாக்கியமாகக் கருதுகிறார்.

"உன் அப்பா நிறைய புண்ணியம் பண்ணியிருக்கார். நீ நன்னா இருப்பே" என்று பெரியவர் சொல்வாராம்.

கலவையிலும் கானஹள்ஸியிலும் உள்ள முதியோர் இல்லங்களுக்குச் சென்று மருத்துவ உதவிகள் செய்து வருவார் மாத்ருபூதம். 'கலவை டாக்டர்' என்றுதான் பரமாச்சாரியார் கூப்பிடுவாராம்!

பொதுமக்கள் வசதிக்காக, ஒரு கோடி ரூபாய் செலவில் ஆராய்ச்சி வசதிகள், காப்பகம், மறுவாழ்வு இல்லம் என்று ஒரே குடையின் கீழ் அமைப்பதற்கான முயற்சியில் டி.டி. வாசுவின் தலைமையில் 'இன்டராக்ஷன் டிரஸ்ட்' என்று ஓர் அமைப்பை நிறுவியிருக்கிறார் மாத்ருபூதம்.

"இது அமோகமா வரும்" என்று ஆசீர்வதித்து, பத்தாயிரம் முதல் நன்கொடையாகத் தந்திருக்கிறார் ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகள்!

அரசாங்கம் தன் பங்குக்கு இதற்கான நிலம் தந்து உதவ, பணிகள் வேகமாக நடைபெற்று வருவதாகக் குறிப்பிட்டார் டாக்டர் மாத்ருபூதம்.

பாரம்பரியப் பெருமைகளிலும் மதிப்பீடுகளிலும் மிகுந்த நம்பிக்கையுடைய இவரது தாரக மந்திரம் :

"நகைச்சுவை உணர்வு ஒன்றுதான் மனிதனை வாழவைக்கிறது!"

**- சுப்ரபாலன்**

## எப்படியும் வியாபாரம்!

**சி**ல மாதங்களுக்கு முன்பு பெங்களூர் கன்டோன்மெண்ட் பகுதியில் பிரபலமாக விளங்கும் கமர்ஷியல் ஸ்ட்ரீட்டில் போக்குவரத்து நெரிசலைத் தவிர்ப்பதற்காக கார்கள் நிறுத்துவதைத் தடை செய்து விட்டார்கள். அந்தத் தெருவில் கார்கள் போகலாமே தவிர, நிறுத்தி வைக்கக் கூடாது. வாடிக்கையாளர்கள் தங்கள் கார்களை அருகில் உள்ள காமராஜர் சாலையிலோ, டிக்கன்சன் சாலையிலோ நிறுத்திவிட்டு கமர்ஷியல் ஸ்ட்ரீட்டிற்குள் நுழைய வேண்டும். இதனால் கடைக்காரர்களின் வியாபாரம் டல்லடித்து விட்டது.

இதை எதிர்த்து, பழையபடி கார்களை நிறுத்த அனுமதிக்க வேண்டுமென்று போலீசாரிடம் போராடிக் கொண்டிருக்கிறார்கள்.

அனுமதி கிடைக்கும்வரை சும்மா இருக்க முடியுமா? பெங்களூர் கமர்ஷியல் அசோசியேஷன் மூலமாக வாடிக்கையாளர்களை கமர்ஷியல் ஸ்ட்ரீட்டிற்கு அழைத்து வருவதற்காக இரண்டு மினி பஸ்களை ஏற்பாடு



• காத்திருக்கும் மினி பஸ்கள்...

செய்திருக்கிறார்கள்!

அழைத்து வரும் வாடிக்கையாளர்களை விரும்புகின்ற கடைகளின் வாசலருகே இறக்கிவிட்டு, ஏற்கனவே வியாபாரத்தை முடித்துக் கொண்டு குறிப்பிட்ட இடத்தில் காத்துக் கொண்டிருப்பவர்களை மீண்டும் அழைத்துச் சென்று அவர்கள் தங்கள் கார்களை நிறுத்தி வைத்திருக்கும் இடங்களில் இறக்கி விடுவார்கள்.

இது போன்ற ஏற்பாடு ஏற்கனவே தில்லி, பம்பாய் போன்ற நகரங்களில் இருக்கிறதாம். தென்னிந்தியாவில் முதன்முறையாக பெங்களூரில் இந்தத் திட்டம் அறிமுகமாகியிருக்கிறது. இந்த மினி பஸ்களை 'வேர் அவுஸ்' மற்றும் 'வீக் எண்டர் கிட்ஸ்' நிறுவனங்கள் ஸ்பான்சர் செய்துள்ளன!

**— அ.குமார்**

# கேட்டுப் பார்த்து சொக்கிப் போனோம்!

'தமிழ்நாட்டிலும் பாரத தேசத்திலும் எத்தனையோ புகழ்பெற்ற ஆலயங்கள் இருக்கின்றன. அவையெல்லாம் அந்தந்த ஆலயத்தில் சாந்நித்யம் பெற்று விளங்கும் சுவாமிகளின் பெயராலேயே விளங்குகின்றன. ... ஆனால் 'மதுரைக் கோயில் மட்டும் மீனாக்ஷி அம்மன் கோயில்'தான். ... எனவே பெண்ணுரிமை இயக்கம், பெண் விடுதலை இயக்கம், பெண் சமத்துவ இயக்கம் ஆகிய இயக்கங்களுக்கெல்லாம் வெகு காலத்துக்கு முன்பே அஸ்திவாரம் அமைந்து வழிகாட்டி, வெற்றியும் பெற்ற பெருமையும் மகிமையும் மதுரை மீனாக்ஷி அம்மனையே சேர்ந்ததாகும்.'

• வெளியிடுகிறார் செம்மங்குடி

– அமரர் கல்கி 1947 ஆம் ஆண்டு எழுதிய தலையங்கத்தின் ஒரு பகுதி இது! தமக்கேயுரிய நகைச்சுவை மிளிர இவ்வாறு ஆரம்பித்தவர், மதுரை மீனாக்ஷி அம்மன் ஆலயத்தில்தான் முதன் முதலாக ஹரிஜன ஆலயப் பிரவேசம் நடந்தது என்பதை நினைவூட்டி, அந்தக் கோயிலுக்கு மகாத்மா காந்தி வரவிருந்ததைத் தெரிவிக்கிறார் :

சக்திவாய்ந்த மீனாக்ஷி அம்மனுக்கு அடுத்த வாரத்தில் மற்றொரு பெரிய மகிமை ஏற்படப் போகிறது. மதுரை மீனாக்ஷி அம்மன் ஆலயத்துக்குள் மகாத்மா காந்தி சென்று அம்மனையும் சுவாமியையும் தரிசிக்கப் போகிறார்.

இந்தப் பழைய பெருமைகளுடன் மதுரை மீனாக்ஷியம்மன் கோயிலுக்குச் சமீபத்தில் ஒரு புதிய பெருமையும் சேர்ந்திருக்கிறது :

எம்.எஸ்.ஸின் தெய்வீகக் குரலில் மீனாக்ஷி சுப்ரபாதம் ஒலிப்பதிவாகி எச்.எம்.வி. நிறுவனத்தினரால் வெளியிடப்பட்டிருக்கின்றது.

செப்டம்பர் பன்னிரண்டாம் தேதி அன்று நடைபெற்ற இந்த காசெட் வெளியீட்டு விழாவில் செம்மங்குடி சீனிவாச அய்யர், ராதா பர்னியர், சுரேஷ் கிருஷ்ணா போன்றோர் எம்.எஸ். – சதாசிவம் தம்பதியை வாழ்த்தியும் போற்றியும் பேசினார்கள். கேட்டு மகிழ்ந்த ரசிகர்களுக்கு எல்லாவற்றையும் விட அதிக மகிழ்ச்சியை அளித்தது நிகழ்ச்சியின் இறுதியில் ஒலிபரப்பப்பட்ட மீனாக்ஷி சுப்ரபாத காசெட்டின் இசைத் துளிகள்தான் என்று சொல்லத் தேவையில்லை.

எம்.எஸ். பாடக் கேட்பது ஓர் அலாதியான அனுபவம் எனில், அவர் பாட்டை பிறர் ரசிக்கக் காண்பதும் கேட்பதும் அதற்கிடான ரசானுபவம்தான்!

'மீனாக்ஷி சுப்ரபாதம்' வெளியீட்டு விழாவில் அதன் சில பகுதிகள் ஒலிபரப்பான போதும் சரி, ரமண மஹரிஷி நூற்றாண்டையொட்டி ஞானானந்தா அரங்கில் நடந்த அவரது கச்சேரியிலும் சரி... பெரியோரும் சிறியோரும் தங்களை மறந்து இசையுடன் ஒன்றிக் கரைவதைப் பார்க்க முடிந்தது.

நமது கர்நாடக இசையை பக்தி பாவத்துடன் கையாளும்போது, சராசரி மனிதர்கள்கூட மிக உயரிய நிலைக்கு உயர்த்தப்படுகிறார்கள் என்பதை அந்த அனுபவங்கள் மீண்டும் உணர்த்தின.

இன்று விஞ்ஞான, தொழில்நுட்ப வளர்ச்சி காரணமாக, இந்த உயர்ந்த அனுபவங்கள் மேலும் பரவலாக்கப்பட்டு வருவது போற்ற வேண்டிய விஷயம். இந்தத்



துறையில் கொடிநாட்டியிருக்கும் எச்.எம்.வி. நிறுவனம் எம்.எஸ்.ஸின் குரலில் மட்டும் இதுவரை 47 காசெட்டுகளை வெளியிட்டிருக்கிறது. மீனாக்ஷி சுப்ரபாதம் 48வது காசெட்!

இசையிலும் சமஸ்கிருத மொழியிலும் புலமை வாய்ந்தவராய், சென்னை, மியூசிக் அகாடமியின் வளர்ச்சியில் பெரும் பங்கு வகித்தவர் வி. ராகவன். காஞ்சி பரமாசார்யார் ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சுவாமிகளின் பக்தர். சுவாமிகள் ஆசி பெற்று அவர் இயற்றியது தான் மீனாக்ஷி சுப்ரபாதம். மீனாக்ஷி அன்னையின் எழிலுருவையும் காஞ்சி காமாக்ஷி, காசி விசாலாக்ஷி, மதுரை மீனாக்ஷி என்று மூன்று முக்கிய ஸ்தலங்களில் அவள் அருள் சொரிவதையும், சக்தியின் வடிவாய் அவள் திகழ்வதையும் போற்றித் துயிலெழுப்புகிறது மீனாக்ஷி சுப்ரபாதம். ஆழமான தத்துவார்த்தங்களும் அதில் அடங்கியிருக்கின்றன.

எம்.எஸ்.ஸின் குரலில் இந்த மீனாக்ஷி சுப்ரபாதம் ஒலிக்கும்போது பால மீனாக்ஷியைத் துயிலெழுப்பும் அன்னையின் குரலாகவே அது நமக்குத் தோன்றுகிறது.

தொடர்ந்து வரும் மாமவ மீனாக்ஷி கீர்த்தனையும் ஆதி சங்கரரின் மீனாக்ஷி பஞ்சரத்னமும் ஒரு பக்தையின் சரணாகதியை உணர்த்துகின்றனவெனில், அம்புஜம் கிருஷ்ணா இயற்றிய 'என் தாய் நீயன்றோ' கிருதியைப் பாடும்போது எம்.எஸ்.ஸின் குரல் ஒரு குழந்தையின் நிலைக்கு மாறிவிடும் விந்தையை என்னவென்று சொல்வது!

காசெட்டின் பிற்பகுதியில் அருமையான, அரிய தமிழ்ப் பாடல்களைச் சேர்த்திருப்பதை எவ்வளவு பாராட்டினாலும் தகும். பிள்ளைத் தமிழும் மதுராம்பிகை பதிகமும் தேவாரமும் ஒலிக்கும்போது தமிழ்ச் சுவையும் இசை ரஞ்சகமும் சேர்ந்து மனம் குவியச் செய்கின்றன.

இந்த காசெட்டுக்கு அருமையாக இசையமைத்துக் கொடுத்திருப்பவர் கடையநல்லூர் வெங்கட்ராமன் (காண்க பெட்டிச் செய்தி) ராகங்களின் தேர்விலும் சங்கதிகளின் வடிவமைப்பிலும் அவரது தனியான முத்திரை பளிச்சிடுகிறது.

ஸ்ரீராம் குமாரின் வயலினில் அழுத்தமும் அடக்கமும் ஒருசேர தொனித்து மெருகு சேர்க்க, வசந்தா கிருஷ்ணமூர்த்தியின் வீணை இருந்தும் இல்லாதது போன்ற நயத்துடன் பக்கபலம் தருகிறது. கே.வி. பிரசாத் சிறப்பாக மிருதங்கம் வாசித்து நிறைவூட்ட உதவியிருக்கிறார்.

எம்.எஸ்.எஸ் என்ற மந்திர எழுத்துக்களின் விரிவாக்கம் மதுரை சண்முக வடிவு சுப்புலக்ஷ்மி என்பது அனைவருக்கும் தெரிந்தது தான். எனவே மதுரை மீனாக்ஷியம்மன் சுப்ரபா தத்தை அவர் பாடியிருக்கும் பொருத்தம் நமக்கு மிகுந்த மனநிறைவைத் தருகிறது. இந்த விஷயத்தில் நம் மனநிறைவைக் காட்டிலும் எம்.எஸ். அவர்களின் மன நிறைவு பல மடங்கு அதிகமாகயிருக்கும் என்பதையும் உணர்கிறோம். அது என்றென்றும் நிலைத்து நீடிக்க மதுரை மீனாக்ஷியம்மனை வணங்குகிறோம்.

• வெங்கட்ராமன்



ராஜாஜி இயற்றி, எம்.எஸ். இசைத்திருக்கும் 'குறையொன்றுமில்லை' என்ற பாடல் இன்று ரசிகர்களிடையே மிகவும் பிரபலமாகியிருக்கிறது. இப்பாடலுக்கும் எம்.எஸ் இசைத்துவரும் வேறு பல பாடல்களுக்கும் மெட்டு அமைத்துக் கொடுத்திருப்பவர் கடையநல்லூர் வெங்கட்ராமன். இவர் கடந்த இருபது ஆண்டுகளாக எம்.எஸ்.ஸுக்கு இந்தப் பணியைப் பிரத்யேகமாகச் செய்து வருகிறார்.

குறிப்பாக, அன்னமாச்சார்யா கீர்த்தனைகளை மேடை தோறும் முழங்கச் செய்ததில் இவருக்கு முக்கியப் பங்கு உண்டு. 'ராரா சின்னன்னா' என்ற அன்னமய்யா கிருதிக்கு இவர் அமைத்த மெட்டைக் கேட்டு மனமுருகிப் பாராட்டிக் கடிதம் எழுதியிருக்கிறார் வித்வான் நேதனூரி கிருஷ்ணமூர்த்தி.

செம்பையிடம் சிறிது காலம் குருகுல வாசம், பின்னர் திருவாங்கூர் சமஸ்தான இசைக் கல்லூரியில் - செம்மங்குடி தலைமையில் முறையான இசை வகுப்புகள், அது முடிந்து திருவாங்கூர் வானொலியில் பணி, பின்னர் சென்னை வானொலிக்கு மாற்றம் என்று இவரது வாழ்க்கைக் குறிப்பு இசை சார்ந்து விரிகிறது.

வெங்கட்ராமனுக்கு மெட்டமைக்கும் ஆற்றல் இருப்பதை உணர்ந்து, வாய்ப்பளித்து வளர்த்தவர் 'சின்னம்பி' என்று அறியப்பட்ட சேதுராமன். வானொலிப் பணியில் இருந்தவர்.

எம்.எஸ்.ஸின் பக்தி பாவமும் ஆற்றலும் முழுமையாக வெளிப்படும் வகையில், சங்கதிகளை நேர்த்தியாக உள்ளடக்கிய மெட்டுகள் வெங்கட்ராமன் அமைத்திருப்பவை...

"திட்டமிட்டு அவ்வாறு அமைக்கிறீர்களா?" என்பது போன்ற ஆராய்ச்சி சார்ந்த கேள்விகளுக்கு வெங்கட்ராமனிடம் பதில் இல்லை.

"எனக்குத் தோன்றுகிற மெட்டைப் போடுகிறேன். அவர் உயிர் கொடுத்துப் பாடுகிறார். அதில் என் பங்கு இருபத்தைந்து சதவிகிதம் தான்..." என்கிறார் மிக மிக எளிமையாக.

'சரியாகப் படிப்பு வரவில்லை' என்பதால் வெங்கட்ராமனை பாட்டு கற்றுக் கொள்ள அனுப்பினார்களாம்...

அப்படிப் படிப்பு வராமல் போனதே நல்லதாகப் போயிற்று என்றல்லவா இன்று மகிழ்ச்சி ஏற்படுகிறது!



# மாணிக்கம்



பெண்டாட்டி விஷயத்தில் தசரதன் மாதிரி இருக்கிற ஓர் அப்பனுக்கு ராமன் மாதிரி ஒரு மகன். இந்த ராமன், தேடி வருகிற சீதைகளைக் கூடக் கல்யாணம் பண்ணிக் கொள்ள மறுக்கிறார். காரணம் ஒரு எக்ஸ்போர்ட் கம்பெனி மாதிரி வீட்டில் நிறைந்து இருக்கும் தங்கைகள். (அவர்களுக்கெல்லாம் கல்யாணம் ஆக வேண்டாமா?)

ஒருவழியாக ஏழோ, எட்டோ தங்கைகளுக்குத் திருமணம் முடித்து, வருஷக்கணக்காகப் பூட்டியிருக்கும் ஊர்க்கோவில் கதவைத் திறந்து, (சமீபகாலமாக இது நம் சினிமாவில் அதிகரித்திருக்கிறது) ஓர் உக்கிரமான கிளைமாக்ஸுக்குப் பிறகு ராஜ்கிரண் காவல் தெய்வ சிலையாக மாறுவதுடன் படம் முடிகிறது.

ஊர்க்காவலர் ராஜ்கிரண், தங்கை, தம்பிகளின் அண்ணன் ராஜ்கிரண் என்று ஒரே படத்தில் இரு குதிரைச் சவாரி.

அண்ணன் பாசத்தையெல்லாம் சிவாஜியிலிருந்து ராஜேந்தர் வரை ஒட்டப் பிழிந்து விட்ட பிறகு, புதிதாக ஏதாவது செய்ய மிக மெனக்கெட்டிருக்கிறார். அந்தக் கீழ்க்குரல் அன்பும் விழிகளில் தெரிகிற பாசமும் ராஜ்கிரணின் பலம். பெரும்பாலும் ரசிக்க முடிகிறது. ஆனால் திருமணமாகிப் போன முதல் தங்கை, பிறந்த வீட்டுக்கு வருகிறபோது உக்கிரமாக எரிந்து விழுகிறார். என்னவாம் காரணம்? ஒரு குட்டிக் கதைக்கான திடுக்கிடும் முடிவாக நினைத்துக் கொண்டு செய்திருப்பதை சுலபமாக ஊகித்து விட முடிகிறது. இயக்குனர் இன்னும் சற்று யோசித்திருக்கலாம்.

எட்டு மனைவிகளை வைத்துக் கொண்டு, ஒற்றுமையாக(?) ஒரே வீட்டில் குடித்தனம் நடத்தும் விஜுச் சக்கரவர்த்தி, படத்தில் ஒரு முக்கியமான விவாதப் பொருள். நடைமுறை சாத்தியமற்றது, கம்பி எண்ண வேண்டியது என்பது ஒருபுறமிருக்க, அவர் தம் மூத்த மகளைப் பெண் பார்க்க வரும்போது, அடுத்ததாக ஒருத்தியை மணந்து கொண்டு வருவதை வீட்டிலுள்ள இதரர் மிகச் சாதாரணமாகவே (குறைந்தபட்ச வருத்தத்துடன்) எடுத்துக் கொள்வதாகக் காட்டியிருப்பது அபத்தம்.

கடைசியில் காரணமே இல்லாமல் அவர் ராஜ்கிரண் காலில் வந்து விழுந்து மன்னிப்பு கோருவது உச்சக்கட்ட நகைச்சுவை. படத்தின் ஆதார விஷயமாக குடும்ப சென்டிமென்ட்டை நோக்கிப் போகும் திரைக்கதை பலவீனமாவது இதனால்தான்.

இன்னொரு காரணம், முன்பே குறிப்பிட்ட இரு குதிரைச் சவாரி. இடையென்று ஒரு கோவில் பிரச்னை, வெட்டு, குத்து என்று தடம் மாறுவதால் ராஜ்கிரணின் தங்கைப் பாச டிராக் அடிவாங்குகிறது. ஐயோ பாவமாக வனிதா விஜயகுமார் வேறு சாக நேரிடுகிறது. (ராஜ்கிரணுக்குப் பேத்தி போல இருக்கிறார். ஜோடியா? கடவுளே!)

பொதுவாக ராஜ்கிரண் படங்களில் பாடல்கள் இனிமை கூடி இருக்கும். இதில் ராஜா இல்லை; அண்ணாரின் இளவல். முயற்சி, திருவினையாக்கவில்லை. ஆனால் ஆர்.ஆரில் பிய்த்து உதறியிருக்கிறார். குறிப்பாக சண்டைக் காட்சிகளில் இரைச்சலாக தமுக்கு, வயலின் கோஷம் காட்டாமல் வெறும் சிறப்பு சப்தத்துடன் நிறுத்திக் கொண்டிருப்பது சிறப்பு. பெண்களுக்குப் பிடிக்கும்விதமாக மனைவிக்கான இலக்கணம், சகோதரப் பாசம், பலதார மணத்தைக் கடிதல், அம்மன் அருள்வாக்கு எனப்பல அம்சங்கள் படத்தில் இருக்கின்றன.

அந்த கிளைமாக்ஸ் பாடலில் தியேட்டரில் சாமியாடப் போகிறார்கள். ராஜ்கிரண் எதிர்பார்ப்பது அதைத்தான் என்றால் நிச்சய வெற்றி.

- ஆர்.பி.ஆர்.

பரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் : வி. முரளி, பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : வி. ராஜேந்திரன்.
ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவஹர்லால் நேரு சாலை, ஈக்காட்டுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா, விளம்பரம் : 2345622; மானேஜிங் டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.

நவராத்திரியை முன்னிட்டு
எங்கள் விசேஷ சேமிப்பு திட்டம்

# சில்வர் டெபாசிட் திட்டம்



டெபாசிட்டுகள் வரவேற்கப் படுகின்றன

# EXPRESS
FINANCIAL EXCHANGE LIMITED

பாங்க் ஆப் அமெரிக்காவின் சார்பு நிறுவனம

- வாகனங்களுக்கான கடன்கள்
- பங்குகள் மீதான கடன்கள்

அங்கீகரிக்கப்பட்ட டீலர் அமெரிக்கன் எக்ஸ்பிரஸ் டிராவலர்ஸ் செக்குகள்

பதிவு அலுவலகம்: நெ. 9, அட்லேவ் டவர், தெற்கு போக் சாலை, சென்னை-600 017.
போன்: 4340325, 4340329, 4341403, ஃபாக்ஸ்: 4341518.

• சென்னை • ஹைதராபாத் • விஜயவாடா • விசாகப்பட்டினம் • பெங்களூர் • திருச்சி
• கும்பகோணம் • கோயம்புத்தூர் • பாண்டிச்சேரி

1996 மார்ச் 4ந் தேதி எகனாமிக் டைம்ஸில் வெளியான வெகு சுட்ட பூர்வ விளம்பரத்தைத் தொடர்ந்து இந்த விளம்பரம் வெளியிடுகிறது.

Helios & Mathison

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN/MS (S) M4392 * Licensed to post without prepayment under PMG's Licence No. TN/MS (S) 161 * Registered as a Newspaper in Srilanka